### இந்திய ஜனாதிபதி டாக்டர் என். சஞ்சீவி ரெட்டி அவர்களின் திருமலை வருகை (3-6-79 & 4-6-79)



தி. தி. தேவஸ்தான மேலாணமைக் குழுத் தலைவர் டாக்டர். என். ரமேஸன் அவர்கள் ஜனாதிபதி அவர்களை வரவேற்றார்.



தி. தி. தேவஸ்தான தோட்டங்களின் கண்காணிப்பாளர் திரு. தம்மண்ணா அவர்கள், திருமலையில் ஜனாதிபதி அவர்களுக்கு செடி வகைகள் சிலவற்றைப்பற்றி விளக்கிக் கூறினார்.

ஜனாதிபதி அவர்களின் திருமலை வருகையின் நினைவாக, திருமலையில் தோட்டச் செடி வகை ஒன்றிற்கு அவருடைய பெயர் இடப்பட்டது.




(4-வது உள் அட்டைப்பக்கமும் பார்க்க)



கண்ணிரண்டும் இமையாமல் செந்நிறத்து
மெல்லிதழ்ப்பூங் கமலத் தெய்வப்

பெண்ணிரண்டு விழிகளையு நோக்கிடுவாய்,
கோவிந்தா! பேணினோர்க்கு

நண்ணிரண்டு பொற்பாத மளித்தருள்வாய்,
சராசரத்து நாதா! நாளும்

எண்ணிரண்டு கோடியினு மிகப் பலவாம்
வீண் கவலை யெளிய னேற்கே.

—*பாரதியார்.*






# ஸப்தகிரி

ஜுலை 1979

மலர்: 10 இதழ் 2

தனிப்பிரதி 50 காசு.

வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:

திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத், I.A.S.,

செயலாட்சித்தலைவர்,

தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:

திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.

தி. தி. தேவஸ்தானம்,

திருப்பதி.

அச்சிடுபவர்:

திரு. எம. விஜயகுமார் ரெட்டி,

மேலாளர்,

தி. தி. தேவஸ்தான அச்சகம்,

திருப்பதி.

முழு விவரங்களுக்கு,

EDITOR

'Sapthagiri'

T. T. D. Press Compound,

TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டைப் படம்: ஆனிவார ஆஸ்தானம்-திருமலை.

# ஆசிரியர் உரை

ரயில் ஒன்று மிக வேகமாகப போகின்றது ஆயினும அதனை அதன் நிலையிலிருந்து இறங்கா வண்ணம் உறுதியான தண்டவாளஙகள் அதற்கு உதவி புரிகின்றன. வேகமாக வநத இரயில் ஒரு நிலையத்தில் வந்து சேர்ந்தபின், தகுநத உத்தரவுகள், ஏறபாடுகள் மேறகொண்டு வழங்கும்வரை அது அங்கேயே நிறகின்றது. பிறகு, கடமையில உள்ள செயல்துறைக் கட்டுப்பாட்டாளரின் ஆணைகளுக்குட்பட்டு அவ்இரயில் வேற்றுததிசையில, சாதாரண நாட்களில் நிலவி வருவதைப் போன்றே, காலம் தாழ்த்தாது சுமுகமான பிரயாண சூழ்நிலைக்கு எந்தவித கேடு நேராத வண்ணம் தான் சேர வேண்டிய அடுத்த இடத்தினை அடைகின்றது.

அதுபோலவே, இரயில்கள் எனும் எலலா நிருவாகத்துறைகளின் செயல்முறைகளும், அவைகளுக்கென்று அமைக்கப்பட்ட சட்டத்திட்டஙகளுக்குட்பட்டு, காகிதங்களின்மூலம் ஆயிரக்கணக்கான மக்களின் உள்ளச் சுமைகளையும், பிரச்சனைகளையும் ஏற்றிக் கொண்டு, 'செயல் தீர்வு'களை நோக்கி சொல்லுகின்றன. ஏதாவது ஒரு தடை அல்லது இடப்பெயர்வு வழியில் இரயில்களுக்கு ஏற்படுவதுபோல் நடைபெறின, குறித்த நேரத்திற்குள் சேர வேண்டிய இடத்தினை அடைவதற்குள். பிரயாணிகளுக்கு ஏற்படுவதைப் போன்றே ஏமாற்றம், வெறுப்பு, சோர்வு ஆகிய உணர்வுகளுக்கு சம்பந்தப்பட்டவர்கள் ஆளாவார்கள். இக்குறுக்கீடுகள் அல்லது இடையூறுகள்தாம் 'சிவப்பு நாடா' என்று நிருவாக மொழியில் அழைக்கப பெறுகின்றன. பல்வேறு நிருவாக நிலைகளில் முடிவுகளை தீர்மானிக்கப்படுபவர்களிடையே கருத்துக்களில் அலலது செயல் முறைகளில வேறுபாடுகள் தோன்றி விடும் சமயத்து, அங்கு இனிமையற்ற அல்லது பிணக்குகள் ஏற்படும் வகையில் ஒரு சூழ்நிலை உருவாக ஏதுவாகின்றது.

ஆகவே எடுக்கப்படும் முடிவுகள் எதிர்பார்க்கக்கூடிய பலன்களை அளிக்கவேண்டுமாயின், நிருவாகத்தின் எல்லா நிலைகளிலும் ஒரு தேர்ந்த கருத்துஒருமைப்பாட்டுணர்வு இருப்பது அவசியமாகின்றது. மேலும், அம்முடிவுகளும் ஒரு மனதாக தீர்மானிக்கப்பட்டதாக அமைவதும் இன்றியமையாதாகின்றது. அவ்வாறு விளங்காவிடின், அவற்றின் வளர்ச்சிப் பாதையில் பல்வேறு நிலைகளில் முடிவுகளுக்கு தீர்வுகாண முடியாமற் போய்விடும்.

இந்தியாவின் அன்றாட நிகழ்ச்சிகளில பல வகைகளில் பங்கேற்றுத் தனக்கென ஓா இடத்தைப் பெற்று, அதே சமயத்து, நாளுக்கு நாள் பெருகிவரும் ஆயிரக்கணக்கான யாத்திரிகர்களின் வருகையினுல் பல்வேறு பிரச்சனைகளை கொண்டு விளங்கும் தி. தி. தேவஸ்தான நிறுவனத்திற்கும், நன்கு வரையறுக்கப்பட்ட மற்றும் தன்னுட்சி உரிமை உடைய ஒரு நிருவாக முறை எவ்வகையானும் அவசியமாகின்றது.

இதனை மனதிற்கொண்டு அண்மையில தி. தி. தேவஸ்தான நிருவாக நிலையில் புகுத்தப்பட்ட புதிய மாற்றங்களினுல், அதனுடைய நிருவாகத் துறைகளில் ஒரு புத்துணர்ச்சி தோன்றியதைத் தொடர்ந்து, முனபிருந்ததைவிட தற்போது நிறுவனம் ஒரு குறிப்பிடத்தக்க செயல் விரைவுடன் செயலாற்றிட முனைந்துள்ளது

தி. தி. தேவஸ்தான மனறக் குழுவிறகும், மேலாண்மைக் குழுவிற்கும் தி. தி தேவஸ்தான செயலாட்சித் தலைவர், அறநிலைய ஆணையர், அரசு செயலாளர் (வருவாய்த் துறை) ஆகியோரை தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களாக ஏறறுக்கொள்ளப்பட்டதைத் தொடர்ந்து தி. தி. தேவஸ்தான நிருவாகத்தின் எல்லா நிலைகளிலும், எல்லா விஷயங்களிலும ஒருமித்த ஒரு கடப்பாட்டுநிலை தோன்றியிருப்பதால், நிறுவனத்தின் மற்றும யாததிரிகப பொதுமக்களின பல்வேறு நன்மைகளை மனதிற்கொண்டு நிறைவேறறபபடும் திட்டங்களை தேவஸ்தானத்தால விரைவிற் செயற்படுத்த முடியும்.

புதிதாக ஏற்படுத்தப்பட்டுளள 'பொது நலநிதி'க் குழு எனும் முறையினுல, தன்னுடைய வருவாயிலிருந்து கோயிலகளைப் புதுப்பித்தல் பணி, சத்திரம், திருமண மண்டபங்கள் ஆகியவறறை கட்டுதல் அல்லது மற்றைய கோயில்கள் சம்பந்தபபட்ட பணிகளை மேற்கொளல் ஆகியவற்றிற்கு நிதி ஒதுக்கப்படும் ஒரு கடினமான, ஒரு பொறுப்புள்ள பணியிலிருந்து தேவஸ்தானம் தன்னை விடுவித்துக் கொள்ளவும், ஒரு குறிப்பிட்ட தொகையினை இத்திட்டத்தின்கீழ் ஒதுக்கிவிடுவதால் தேவஸ்தானம் யாத்திரிகளின் தங்கும் வசதி, தரிசனம் மற்றும தன் நேரடி பொறுப்பின்கீழ் விளங்கும் மற்றைய கோயில்கள் பற்றிய விஷயங்களிலும் தன்னுடைய முழு கவனத்தைச் செலுத்த முடியும். புதிய மாற்றத்தின் விளைவாக அமைக்கப்பட்ட 'ஸ்ரீவேங்கடேஸ்வரா சிஷ்டாசாரா வித்யா ஸமஸ்தா'வின்கீழ், சமயம் மற்றும் ஆன்மீகக் கல்வியறிவினை வளர்த்திடும வகையில், சீரிய சமய நூல்களை வெளிக்கொணர்ந்திட ஒரு குறிப்பிப்பட்டத்தொகை ஒதுக்கப்பட்டுள்ளது.

சுருங்கக்கூறின், தி. தி. தேவஸ்தானம தன்னுடன் புதிய பொறுப்புக்களை இணைத்துக் கொண்டு ஒரு தெய்வீகப் பாதையில் அடியெடுத்து வைத்துள்ளது. உறுதியுடனும், ஊக்கத்துடனும் தன்னுடைய குறிக்கோளினை அடைந்திட அவ் எல்லாம் வல்ல வேங்கடவனின் அருள் என்றென்றும் கிட்டுவதாகுக.

# தி. தி. தேவஸ்தான மேலாண்மைக்குழு முடிவுகள்

(திருமலையில் 2-6-79 அன்று நடைபெற்ற குழு கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டசில முக்கிய முடிவுகள் பின்வருமாறு)

1979-80-ம் நிதி ஆண்டுக்காக ரூ 25 இலட்சத்தை அறநிலைய நிதிக்கு ஒதுக்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

மற்றைய கோயில்களுக்கு உதவவும், தற்போது இருக்கும கோயில்களைப் புதுப்பித்தல் பணிகளுக்கும், திருமண மண்டபங்கள், சத்திரங்கள், ராம மந்திரங்கள் ஆகியவற்றைக் கட்டுவதற்கும், திருமலைக் கோயில் சம்பந்தப் படாத மற்றையபொதுத்துறைப் பணிகளுக்கும், தனது (தி.தி.தே) வருவாயிலிருந்து ஆண்டொன்றுக்கு ரூ 60 இலட்சத்தை பொது நல நிதியின்கீழ் ஒதுக்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.

தி.தி.தேவஸ்தானம் ஒரு தனிப்பட்ட நிறுவனமாக இருப்பதாலும், தனக்கே உரிய சீரான நிதி மற்றும் நிருவாக வழிமுறைகளைக் கொண்டிருப்பதாலும் அரசாங்கத்தினரால் தீர்மானிக்கப்பட்ட கணக்கு மற்றும் அறநிலையத் துறைத்தேர்வுகள்தி.தி.தேவஸ்தானத்திற்கு தேவையோ அல்லது பயனோ இருக்காது என்று குழு கருதுவதால் எதிர்காலத்தில் தி தி. தேவஸ்தான ஊழியர்களுக்கென தேவஸ்தானத்தாரால் நடத்தப்படும் தனிப்பட்ட தேர்வுகளை புகுத்த குழு முடிவு செய்துள்ளது.

திருமலை பிரஸாதமான லட்டின் விலை ரூ 2-50 விருந்து ரூ 2-00 ஆக உடனடியாக குறைக்க குழு முடிவு செய்துள்ளது.

கபிலதீர்த்தம் சாலையில் அரசு தொழில்நுட்பக் கல்லூரிக்கு அருகே உள்ள காலி கோபுரம் மடத்தாரின் காலி நிலத்தினை தி. தி. தேவஸ்தானம் வாங்குவதற்கு குழு அனுமதியளித்துள்ளது.

வெளியூரில் உள்ள கோயில்களுக்கு, அக்கோயில்கள் சம்பந்தப்பட்ட நிருவாகத்தினரின் வேண்டுகோளுக்கிணங்க, கோயில் குடைகள் வழங்கும் வகையில் அக்குடைக்காகும் செலவில் 50 சதவிகிதத்தினைப் பெற்றுக்கொண்டு அக்குடைகளை வழங்குவதென்று குழு முடிவுசெய்துள்ளது. இது சம்பந்தமாக சென்னையிலுள்ள குடை அறநிலையத்தாரிடமிருந்து 100 குடைகளை வாங்குவதென்றும் குழு முடிவு செய்துள்ளது.

அண்மையில் திறக்கப்பட்ட தி. தி. தேவஸ்தான புதிய நிருவாகக் கட்டிடத்தில் வரவேற்பு அறையில் புதிய மேசை, நாற்காலிகள் வாங்குவதற்கு குழு ரூ 49,000 ஒதுக்கியுள்ளது.

ரிஷிகேசத்திலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோயில் மற்றும் ஸ்ரீ சந்திர மௌலீஸ்வரர் கோயிலுக்கென புதியகொடி மரங்களை அமைப்பதற்கு குழு ரூ 10,000 ஒதுக்கியுள்ளது.

திருமலையில் கல்யாண கட்டாவில், தான் கண்டெடுத்த மகளிர் கைக் கடிகாரத்தினை திருமலை வரவேற்பு அலுவலரிடம் ஒப்படைத்த என். எம். ஆர். ஊழியரான திரு டி. பாஸ்கர் ரெட்டிக்கு ரூ. 25-ஐ பரிசாக வழங்குதற்கு குழு ஒப்புதல் அளித்துள்ளது.

எம்.எஸ்.எண்.115 (தேதி 11-2-77) என்ற அரசு உத்திரவினை தி. தி. தேவஸ்தானமும் பின்பற்றும் வகையில் எதிர்காலத்தில் தி. தி. தேவஸ்தான நிறுவனத்திற்கு பல்வேறு பதவிகளுக்கு நபர்களை தேர்ந்தெடுக்கும் சமயத்து, சிறந்த விளையாட்டு வீரர்களுக்கு முதலிடம் வழங்குவதென்று குழு முடிவுசெய்துள்ளது.

கடப்பை மற்றும் புரதொட்டூர் நகரங்களின் நகராட்சியினர்க்கு ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் முறையே வெண்கலம் மற்றும் கல் திருவுருவச் சிலைகளை இனமாக வழங்குவதென்று குழு முடிவுசெய்துள்ளது.

ஆந்திரப் பிரதேசத்தில் திருப்பதி, விஜயவாடா, காகிநாடா, ராஜமண்டிரி, கோனசீமா, ஹைதராபாத், மந்த்ராலயம் ஆகிய இடங்களில் உள்ள வேதரக்ஷண நிலையங்களுக்கு தலா ரூ 20,000 வழங்க குழு முடிவு செய்துள்ளது.

ஆந்திரப்பிரதேசம் பீடாபுரத்தி லுள்ள வடமொழி பள்ளிக்கென ரூ 10,000 வழங்க குழு முடிவு செய்துள்ளது.

ஆந்திர மாநிலம் ஏர்பேடுலுள்ள ஸ்ரீவேங்கடேஸ்வரா அனாதை நிலையம் மற்றும் வியாஸாஸ்ரமத்தைச் சார்ந்த 12 மாணவர்களுக்கு உதவிச் சம்பளம் வழங்கும் வகையில் 1977-78 மற்றும் 1978-79 ஆண்டுகளுக்காக ரூ 12,000 வழங்க குழு ஒப்புதல் அளித்துள்ளது.



## சந்தாதாரர்களுக்கு...

31-8-79-ம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும். T

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 20, | 70, | 95, | 105, | 142, | 143, | 188, |
| 190, | 191, | 192, | 270, | 271, | 272, | 276, |
| 443, | 451, | 452, | 454, | 455, | 456, | 457, |
| 459, | 460, | 461, | 462, | 463, | 466, | 468, |
| 469, | 470, | 472, | 485, | 487, | 864, | 914, |
| 916, | 917, | 918, | 919, | 920, | 922, | 923, |
| 924, | 925, | 926, | 928, | 929, | 932, | 933. |

# பத்ராசலம் ஸ்ரீ ராமன்!

"சன்மிஷ்டை"

ஆந்திர நாட்டில் பிரசித்தி பெற்ற யாத்திரைத் தலங்களில் பத்ராசலம் மிகச் சிறந்தது. ஸ்ரீராமபிரானது வன வாழ்க்கையுடன் ஒட்டிய பெருமை யுடையது இத்தலம். ஸ்ரீராமபிரான் தமது வன வாசத்தின் கடைசி நாட்களை இப்பிரதேசத்தில் கழித்தார் எனக்கூறும் இராமாயணம். சீதாப் பிராட்டியாரை இராவணன் அபகரித்துச் சென்றதும் இப்பிரதேசத்திற்கு அருகில்தான் எனக் கூறுவாருமுளர்.

மேருமலையும் அதன் மனைவியும் பிரம்ம தேவனை நோக்கித் தமக்குப் புத்திரசந்தானம் அருளும்படிப் பிரார்த்தித்தனர். அவர்கள் கடுந்த வத்திற்கிரங்கிய பிரம்மதேவனும் அவ்வாறே வரமீந்தார். அவர்கள் தவப் பயனுய்ப் பிறந்தவனே பத்ரன். முனிவர்களுக்கும் சாதுக்களுக்கும் தவம் புரிவதற்கு இடைஞ்சலாக வன விலங்குகளும் அசுரர்களும் இருந்தனர். எனவே, மலைவடிவங்கொண்டு அவர்கள் தவத்தை மேற்கொண்டனர். பத்ரனும் அவ்வாறே மலை வடிவுடன் தவம் புரிந்து கொண்டிருந்தான்

ஸ்ரீராமபிரான், சீதா பிராட்டி, இலக்குமணன் ஆகியோருடன் தண்டகாரணியத்தின் இப்பகுதியில்-கோதாவரி நதிக்கரையில் இருந்த இக்குன்றின்மீது-வந்து தங்கினர். அவர்கள் பாதச்சுவடு பட்ட மாத்திரத்தில் மலை மனித வடிவு கொண்டு, இராமன் பாதத்தடியில் வீழ்ந்து சாஷ்டாங்கமாய் வணங்கியது.

இராம பாத ஸ்பரிசத்தால் மனித உருப்பெற்றுன் பத்ரன். தனது வரலாற்றை இராமபிரானுக்குக் கூறினுன் பத்ரன். ஸ்ரீராமபிரான் அன்றுபோல் என்றும் தன்மீது அமர்ந்திருக்க வேண்டுமென்று பிரார்த்தித்தான் பத்ரன். அவன் வேண்டுகோளுக்கிணங்க சிலாரூபியாக இராமன், மனைவி, தம்பி ஆகியோர் சகிதம் இம்மலைமீது வீற்றிருப்பதாக ஐதீகம்!

சுமார் மூந்நூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றியது இவ்வாலயம். பாகாலா தாமக்கா என்றவளப்பிரதேச மங்கையின் கனவில் இராமபிரான் தோன்றி தாம் அங்கே எழுந்தருளி இருப்பதாகக் கூறினுர். தாமக்கா தேடிப் பார்த்த போது இராம லக்ஷ்மணர்களது சிலை அவளுக்குக் கிடைத்தது. சிலை கிடைத்த இடத்திலேயே ஒரு சிறிய குடிசை எழுப்பி அதனில் அம்மூர்த்திகளை எழுந்தருளுவித்துத் தினமும் சுவாமிக்கு அபிஷேக ஆராதனைகள் செய்ய ஏற்பாடு செய்தாள். சுற்றுப் பக்கத்திலுள்ள கிராமத்தினர் அனைவரும் இங்கே வந்து சுவாமியை வணங்கிச் செல்வாராயினர். நாளடைவில் இதன் பெருமை எல்லா ஊர்களுக்கும் பரவியது.

அந்த நாட்களில் பத்ராசலத்தைச் சார்ந்த பகுதிகள் குதுப்புசாகி மன்னர்கள் ஆதிக்கத்தின்கீழ் இருந்து வந்தன. இவர்களது தலைநகரம் கோலகுண்டா - தற்காலத்தில் கோல் கொண்டா-என்று அழைக்கப்படுகிறது. நவாப்பின் கீழ்த் தாசில்தாராக கோபன்னு என்பவர் பணியாற்றி வந்தார்.

நிலவரி வசூல் செய்து கொண்டு அவர் இந்தக் கிராமத்தை அடைந்தார். அங்குள்ள ஆலயத்தின் பெருமையைப்பற்றி ஊராரிடம் நன்கு அறிந்து கொண்டார் அவர். தாமக்கா எழுப்பிய குடிசைக் கோயில் அவர் உள்ளத்தில் பிரம்மாண்டமான வடிவில் உருப்பெற்றது.

கோபன்னு ராமதாசர் ஆனுர். நிலவரியாக வசூல் செய்த தொகை ஆறு லட்சம் வெண்பொற்காசுகளை ஆலயத் திருப்பணிக்கும் ஆபரணங்கள் செய்வதற்கும் செலவிட்டார் ராமதாசர். வரித்தொகை அரசாங்க கஜானுவிற்குப் போய்ச் சேரவில்லை என்று நவாப் தானிஷாவிற்குச் செய்தி எட்டியது.

வரித்தொகையைக் கஜானுவில் செலுத்தாதற்காக ராமதாசரைச் சிறையில் ஓர் இருட்டறையில் அடைத்தான் தானிஷா. உண்ண உணவுகூடக் கொடுக்காமல் அவரைச் சித்திரைவதை செய்தார்கள் சிறைக் காவலாளிகள். நஞ்சையுண்டு தமது உயிரைப் போக்கிக் கொள்ளத் தீர்மானித்தார் ராமதாசர்.

அவர் விஷம் அருந்தப்போகும் தருணத்தில் பணம் பூராவும் நவாபுக்குச் செலுத்தப்பட்டு விட்டதாக அவருக்கு ரசீது கிடைத்தது. ஸ்ரீராமபிரானே அன்றைய இரவு பணியாளனுகச் சென்று நவாப்தானிஷாவுக்குப் பணம் பூராவையும் செலுத்தினுராம். இராமனின் கருணையை என்னவென்று சொல்வது?

விடியற்காலையில் தானிஷா, தானே சிறைக்குச் சென்று ராமதாசரை விடுவித்தான். பணம் செலுத்தப் பட்டதை அறிந்த ராமதாசர் பகவானுடைய அருளை நினைந்து உருகினுர்; ஆடிப் பாடினுர். பகவானே தன்னிடம் பணியாளனுக வந்து பணம் செலுத்தியதை அறிந்த தானிஷா ஆச்சரியமடைந்து, மீண்டும் ராமதாசரைத் தாசில்தாராக்கினுன். ஆலயத்திற்குப் பல நன்கொடைகள் வழங்கினுன். பகவான் தானிஷாவிற்கு நஷ்டஈடாக அளித்த வெண்பொற் காசுகள் இன்றும் அவ்வாலயத்தில் உள்ளன; யாவரும் சென்று பார்க்கலாம். இவ்வாறு ராமதாசரது பக்தியும் பணியும் உருவாக்கிய கோயில் பத்ராசலம்!

இராமதாசரது பெயரும புகழும் இன்று பரவாத மாநிலம் இல்லை. அவருடைய பாடல்கள் இன்றும் பக்தியுடன் பாடப்பட்டு வருகின்றன. அவருக்குப் பின்னால் சில காலம் கழித்து ஆலயம் ஜீரண நிலையை அடைந்தது. குண்டூர் வாசியான நரசிம்மதாசர் ஆலயத்தை சீரணோத்தாரணம் செய்தார்.

அவர் காலத்தில் ஹைதராபாத் நைஜாமின் மந்திரியாக இருந்தவர் ராஜா சந்துலால். அவர்மூலம் ஒரு கிராமத்தைப் பத்ராசல ஆலய நிர்வாகத்திற்கு மானியமாகப் பெற்றார் நரஸிம்ம தாசர். ஸர்க்குரு தியாக ராஜர் என்ற தென்னாட்டு சங்கீத மேதை பத்ராசலத்திற்குச் சென்று ஸ்ரீஇராமபிரான் முன்னர் பல கிருதிகள் தெலுங்கில் பாடினார் என்று வரலாறுகள் கூறுகின்றன.

ஹைதராபாத் நிஜாமின் பொக்கிஷத்திலிருந்து ஏராளமான பல அரிய பொருள்கள் ஆலயத்திற்கு அளிக்கப்பட்டன. இக்கோயில் ஆந்திர மாநில அரசுக்குச் சொந்தமானது என்பது குறிப்பு.

பத்ராசல ராமபிரான் சதுர்புஜங்களுடன் காட்சியளிப்பது ஒரு புதுமை. ஸ்ரீராமபிரான் திருமேனி இரண்டு கரங்களுடன்தான் எங்கும் காணப்படும். தமிழ் நாட்டில் செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள பொன்பதற் கூடத்தில் ஒரு சதுர்புஜ ராமனைக் காணலாம். இக்கோயில் செங்கற்பட்டுக் கருகில் இரண்டு மைல் தூரத்திலுள்ளது.

## அறிவிப்பு

திருமலையில் காட்டேஜுகளுக்காக முன்பணம் செலுத்தி, தனி ஒதுக்கீடு (Reservation) செய்து கொள்ளும் யாத்திரிகர்களின் நன்மைக்காக, மேலாண்மை கீழ்வரும் சலுகைகளை அளித்துள்ளது.

1. காட்டேஜுகளுக்காக தனி ஒதுக்கீடு செய்து கொணட தேதிகளுக்குள் சம்பந்தப்பட்ட யாத்திரிகர்கள் நாட்கழித்து வந்தாலும், மீதம் இருக்கும் நாட்களுக்கு, அவர்கள் கணக்கில், வராத நாட்களுக்குரிய கட்டணத்தைப் பிடித்துக் கொண்டு, மீதித் தொகைக்கு அவர்களுக்கு இட வசதி அளிக்கப்படும்.

2. காட்டேஜுகளுக்காக முன் பணம் அனுப்பியவர்கள், தாங்கள் கோரியபடி தங்கள் பெயரில் ஒதுக்கீடு செய்யப்பட்ட நாட்களை, சூழ்நிலைக் காரணமாக மாற்றிக் கொள்ள நினைத்தால், அவர்கள் இரண்டு நாட்களுக்கு முன்பேயே, (அதாவது ஒதுக்கீடு செய்யப்பட்ட தேதிக்கு முன் இரண்டு நாட்கள்) இது சம்பந்தமாக விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.

3. காட்டேஜுகளுக்காக முன் பணம் செலுத்தியவர்கள் தங்களுக்கு வழங்கப்பட்ட தனி ஒதுக்கீடு தேதிகளில் வர இயலாது, செலுத்திய தொகையைத் திருப்பிப் பெற வேண்டுபவர்கள், தங்கள் எண்ணத்தை, ஒதுக்கீடு செய்யப்பட்ட தேதிக்கு இரண்டு நாட்களுக்கு முன்பேயே விண்ணப்பம் ஒன்றன் மூலமாக தெரிவித்தல் வேண்டும்.

செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம, திருப்பதி.

பத்ராசல ராமனது திருக்கரங்களில் அம்பு, வில், சங்கு, சக்கரம் ஆகியவை இருக்கின்றன. சங்கம் வலக்கையிலும், சக்கரம் இடக்கையிலும் இருப்பது இங்கு மற்றொரு புதுமையாகும்.

இராவணாதிகளை வதம் செய்த பின்னர் உலகில் அமைதி நிலவ வேண்டுமென்பதற்காக இடக்கையில் உள்ள சங்கத்தை வலக்கையில் ஏந்தியிருப்பதாக ஐதீகம். உலகத்திற்கு சமாதானத்தை வலியுறுத்துகிறது சங்கமேந்திய கரம்.

பத்ராசலத்தில் வைகுண்ட ஏகாதசி விழாவும், ஸ்ரீராம நவமி விழாவும் மிக்க விசேஷமாகக் கொண்டாடப் படுகிறது. ஸ்ரீராம நவமி தினத்தன்று பல ஆபரணங்கள், பட்டாடைகள் அணிவித்து விக்கிரகங்களை தேரில் ஏற்றி திருவீதி வலம் வருவார்கள். பின்னர் திருக்கல்யாண மண்டபத்தை நன்கு அலங்கரித்து திருக்கல்யாண உற்சவம் நடைபெறும். அன்று பக்தர்கள் கூட்டம் கூட்டமாக வந்து ராமனை வழிபடுவார்கள்.

பத்ராசலம் மிகப்புனிதமான க்ஷேத்திரமானாலும் அங்கு சென்று வர வசதிகள் குறைவு. கோதாவரியைப் படகில் கடந்து ஊருக்குச்செல்ல வேண்டும். இக்காலங்களில்தான் தண்ணீர் பெருக்கெடுத்தோடும். பலமுறை படகுகள் கவிழ்ந்து மக்கள் இறந்து போவதுமுண்டு. இதை முன்னிட்டு இன்று கோதாவரியின்மீது புதிய பாலம் கட்டுகிறார்கள்.

இந்த ஆலயம் மீண்டும் ஜீரண நிலையை அடைந்துவிட்டபடியால் இதனைச் சீர்படுத்த முயற்சிகள் நடக்கின்றன. மிகச் சீக்கிரத்தில் இவற்றை ஒழுங்குபடுத்த ஆந்திர சர்க்கார் எடுத்துள்ள முயற்சி பாராட்டதற்குரியது.

விஜய வாடாவிலிருந்தும், ராஜ மகேந்திரத்திலிருந்தும் பேருந்துகள் மூலம் பத்ராசலம் போய் வரலாம்.

★

(தொடர் கட்டுரை)



# சிறையிருந்த செல்வி

பஞ்ச பூதங்களில் நீரும், காற்றும் கூட அழிக்கும் ஆற்றல் கொண்டன வாக இருப்பினும் நெருப்பைப் போல முழுவதும் அழிக்க வல்லனவன்று அவை. நெருப்பு எதனையும் எரித்து முழுவதுமாக அழிக்கவல்லது. அத் தகைய ஆற்றல் வாய்ந்த நெருப் பினையே, அக்னி பகவானையே எரிக்கக் கூடிய ஆற்றல் வேறு எதற்காவது உண்டா? என்ற கேள்விக்கு உண்டு என்று பதிலளிக்கிறார் கம்பர். கற்புக் கரசியான சீதையின் கற்புக்கு அந்த ஆற்றல் இருந்ததாகக் கம்பர் தம் காவி யத்தில் நிலைநாட்டியிருப்பதை இங்கு காண்போம்.

இராம — இராவண போர் முடிவு பெறுகிறது. இராமன் ஆணையின் பேரில் அனுமனும் விபீடனும் சீதை யினை இராமனிடம் அழைத்து வரு கின்றனர். பல நாட்கள் பிரிந்த தனது மனைவியையா இராமன் கண்டான்? இல்லை என்பார் கம்பர்.

''கற்பினுக் கரசினைப் பெண்மைக் காப்பினைப்
பொற்பினுக் கழகினைப் புகழின் வாழ்க்கையைத்
தற்பிரிந் தருள்புரி தருமம் போலியை
அற்பினத் தலைவனு மமைய நோக்கினான்''
(கம்ப-யுத்த.மீட்சிப் படலம்-60)

என்கிறது கம்பரின் பாடல். இங்ஙனம் கற்பினுக்கோர் அணியைக் கண்ட இராமன், சீதையின் மாசற்ற தன்மையை, கற்பினைத் தான் நன்கு உணர்ந்து கொண்டவனாக இருப் பினும், தன்னைச் சுற்றியுள்ளவர் அனைவரும் சீதையின் கற்பைப் புரிந்து கொள்ள செய்ய வேண்டும் என்று விரும்புகிறார். உலகினுக்கும் சீதை யின் கற்பை நிலைநாட்ட, கோபம் கொண்டவரைப் போல சீதையை நோக்கிச் சில சுடு சொற்களை உதிர்க் கிறார். ''நீ இராவணன் நாட்டில் நெடுநாள் வசித்து, அடங்கியிருந்தாய். அறுசுவை உணவுகளை உண்டு வாழ்ந் தாய். நல்லொழுக்கம் அழிந்திடவும் நீ அழிந்தாய் இல்லை. 'தன் மனை யாளைக் கவர்ந்து சென்றவனைக் கொன்றிலன்' என்ற பழியை வரா வண்ணம் தடுக்கவே நான் இராவண னைக் கொன்றேனே தவிர, உன் பொருட்டன்று. மாமிசம் உண்டும், மது குடித்தும் அங்கே வாழ்ந்த நீ எமக்குத் தகுதியாகச் செய்யும் விருந்தும் உண்டோ? ஒளி பொருந்திய மணியைப் போன்ற உன் நற்குணங்கள் ஒழிந்தன உயர் குடிக்கு ஏற்ற இயல்பும், பதிவிரதா தருமமும், புகழும், பொய் ஒழுக்க மில்லாமை யும், நல்லொழுக்கமும், அறிவு தேர்ச்சியும், முதலிய நல்ல ஒழுக்கங் கள் நீ ஒருத்தி தோன்றியதனால் ஈகை யில்லாத அரசனின் புகழ் போல் அழிந்தன. கணவன் பிரிந்த காலத் தில் பெண்கள் ஐம்புலன்களை அடக்கி வைப்பர். பெருந்தவத்தை உடைய வராயிருப்பர். ஒரு பழி இடையே வந்து சேர்ந்தாலும், தன் உயிரை

திரு என். கிருபானந்தன்,
M.A., BSc, Jr. Dip-in-Ling,
திருப்பதி.

# தி. தி. தேவஸ்தான தமிழ் சமய வெளியீடுகள்

| | ரூ. | பை |
|---|---|---|
| அஷ்டோத்ர சகஸ்ரநாம அர்ச்சனை ... | 1 | 00 |
| பால பாகவதம் (செவ்வைச் சூடுவார்) முதல் பாகம் ... | 4 | 00 |
| ,, ,, இரண்டாம் பாகம் ... | 4 | 00 |
| தசரூபகம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| குருபரம்பரை (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| திருமலை வழிகாட்டி ... | 0 | 25 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மகாத்மியம் (தலபுராணம்) ... | 2 | 00 |
| ஸித்தாந்த த்ரய சங்க்ரஹம் (திரு. ஓ. வி. கபிஸ்தலம் (தொகுத்தவர்) தேசிகாச்சார்யா) ... | 2 | 50 |
| ஸ்ரீராமஜெயத் திருப்புகழ் பகுதி I, பகுதி II. (Each) (தொகுத்தவர்) (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| சர்வ தேவதா பூஜா விதானம் — தி. தி. தே — ... | 0 | 70 |
| ஸுப்ரபாதம் (பொருளுடன்) ,, ... | 0 | 50 |
| ஸுப்ரபாதம் ,, ... | 0 | 12 |
| செம்பொருள் (எஸ். கிருஷ்ணவேணி அம்மையார்) ... | 1 | 50 |
| ஸ்ரீநிவாச கல்யாணம் (வண்ணப்படங்களுடன்) ... | 11 | 50 |
| திருக்குறள் (பொருட்பால்) திரு.டி.பி. பழனியப்பபிள்ளை ... | 7 | 50 |
| ,, (காமத்துப்பால்) (தொகுத்தவர்) ... | 4 | 00 |
| திருவாய்மொழி { கே. பாலசுந்தர நாயக்கர் } பாகம் 1 ... | 7 | 50 |
| { விளக்கவுரையுடன் } பாகம் 2 ... | 10 | 50 |
| யாப்பொளி (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி ஸுப்ரபாதம் (திரு. எம். வி ராமநாத கனபாடிகள் ... | 0 | 20 |
| நித்யாநுஸநதானம் — தி. தி. தே — ... | 3 | 75 |
| ஏழுமலை யாத்திரை (திரு. டி.கே. நாராயணன்) (அச்சில்) ... | 4 | 00 |
| சித்திர ஸுப்ரபாதம் (வண்ணப்படங்களுடன்) தி தி.தே - ... | 8 | 00 |
| சித்திர திருப்பாவை (வண்ணப் படங்களுடன்) தி.தி.தே- ... | 8 | 25 |

## விற்பனைச் சலுகை விவரங்கள்

தி. தி. தேவஸ்தான கல்வெட்டு அறிக்கைகள், தி. தி. தேவஸ்தான கல்வெட்டுத் தொகுதி 1 மற்றும் தொகுதி 5 ஆக மூன்று நூல்களுக்கு, செட்டாக வாங்குவோர்க்கு, $12\frac{1}{2}\%$ தள்ளுபடி வழங்கப்படும்.

'ஸ்ரீ அன்னமாச்சார்யா சங்கீர்த்தனமுலு' மற்றும் 'தாள்ளபாக்கா பணிகள்' ஆகிய 6 தொகுதிகளை (தெலுங்கு) ஒருமித்துவாங்கினல் $12\frac{1}{2}\%$ தள்ளுபடி வழங்கப்படும்.

ரூ. 100 அல்லது அதற்கு மேற்பட்டு விளங்கும் விற்பனைக்கு $12\frac{1}{2}\%$, ரூ. 500/- லிருந்து ரூ. 1000/- வரை விளங்கும் விற்பனைக்கு 20%, ரூ. 1000/-க்கு மேல் இருக்கும் விற்பனைக்கு 30% என்றவாறு கமிஷன் வழங்கப்படும். ரூ. 100/-க்கு மேற்பட்டு சரக்காணைகள் விளங்கினல், அவற்றிற்கான தபால் செலவினை தி. தி. தேஸ்வதானம் ஏற்கும்.

ஆசிரியர்,
தி. தி தேவஸ்தானம்
(தி. தி. தே. பிரஸ் காம்பௌண்டு) திருப்பதி.

விட்டொழித்தாவது அப்பழியைப் போக்கிக் கொள்வர். உனது தீயொழுக்கம் என் நெஞ்சை அறுக்கிறது. ஒன்று இறந்தொழி அல்லது தக்கோரிடத்தில் சென்றுவிடு'' என்று சீதையின் உள்ளம் வெட்கத்தாலும், வேதனையாலும் குன்றுமாறு இராமன் கூறுகிறன். இச் சொற்கள் வெளி பார்வைக்கு வசைகளைப் போல இருப்பினும், உன்னிப் பார்க்கின், இராமன் சீதையின் கற்பை மற்றவர் நன்கு உணருமாறு செய்ய பெரிதும் முயல்வதைக் காணலாம். 'நான் என் பழியைப் போக்கிக் கொள்ளவே இராவணனை அழித்தேன்; உன் மீதான காதலால் அன்று' என்று இராமன் கூறிய உடனே, இராமனின் பழைய துயர நிலையையும், சீதையின் பிரிவால் புலம்பியதையும் மற்ருேர் எணணிப் பார்ககாமலா விடுவர்? அங்ஙனம் இராமன் கூறியது பொய் என்று உணர்ந்து உடனே அவனது மற்ற சொற்களையும் எண்ணிப் பார்க்க முயல்வது இயற்கையே. 'மாமிசம் உண்டு, மது அருந்தி இராவணன் நாட்டில் இருந்தாய்' என்ற இராமனின் பழிச் சொல்லைக் கேட்டும் மற்றவர்கள் சீதையின் துயரத்தால் மெலிந்த உடலையும் களைப்பையும் கண்டு இராமன் கூறிய பழி முறையானதன்று என்று முடிவுக்கு வருவர் அன்றே? மேலும் அனுமன், அசோக வனத்தில் தான் கண்ட சீதையின் துயர நிலையை. உணவு உறக்கமின்றி இருந்த கோலத்தை இராமனுக்குக் கூறியது மற்றவர்களுக்கும் எட்டாமலா போயிருக்கும்? அதையும் அவர்கள் இப்போது நினைவு கூருமலா இருப்பர்? மேலும் 'கணவனைப் பிரிந்த பெண ஐம்புலன்களை அடக்கி, தவமிருப்பாள். பழி நேரின் உயிரை மாய்த்துக் கொள்ளவும் செய்வாள். நீ அவ்வாறு செய்யவில்லையே' என்று இராமன் சீதையினைக் குறை சொல்லியதும், அசோகவனத்தில் சீதை துயரச் செல்வியாக, துறவிச் செல்வியாக நின்றதையும், பழியைப் போக்கிக்

(35-ம் பக்கம் பார்க்க)

# ஸ்ரீ அகோராஸ்திரம்

இதிகாச காலங்களில்தான் அஸ்திரப் பிரயோகங்கள் பிரம்மாஸ்திரம், ஆக்னேயாஸ்த்ரம், வாருணாஸ்திரம் என்பனபோல் இருந்து வந்ததாக நாம் நம்பி வருகிறோம். தற்போது அவை யாவும் அழிந்துபட்டன என்று சிலரும், இவ்விதம் 'மந்திரத்தில் மாங்காய் பறிப்பது என்பது' வீண்புரட்டு என்று வேறு சில வீணர்களும் பேசி வருவதையும் நாம் கண்கூடாகக் காண்கிறோம். ஆனால் மந்திரசாராவளி, ஸ்ரீ வித்யார்ணவ தந்த்ரம், ப்ரபஞ்ச ஸார ஸங்கிரஹம், பூதடாமர தந்த்ரம் போன்ற பல மந்த்ர சாஸ்த்ரங்களும், அதர்வண வேதமும் அகோராஸ்திரம், பாசுபதாஸ்திரம், வ்யோமாஸ்த்ரம், ப்ரத்யங்கிராஸ்திரம் போன்ற பல அஸ்திரங்களைப் பிரயோக விதிகளுடன் கூறியிருப்பதைக் காண்கிறோம். எவ்விதம் ஸ்ரீவித்யை மந்த்ர ராஜம் என்று அழைக்கப்படுகிறதோ அவ்விதமே அகோராஸ்த்ரம் அஸ்த்ர ராஜம் என்று அழைக்கப்படுகிறது.

அகோராஸ்த்ரத்திற்குரிய வச்யம் (பிறரை வசீகரித்தல்), ஸ்தம்பனம் (செயலற்றவனாக செய்தல்), மோஹனம் (உபாசகன் மீது மோஹிக்க வைத்தல்) ஆகிய மூன்று பிரயோகங்களையும் தீபத்தில் ஒளி வடிவாய் அகோராருத்ரரை வழிபடக்கிடைக்கும். இதைத் தவிர ஆகர்ஷணம் (பிறர் சக்தியை நாம் கவர்தல்), வித்வேஷணம் (எதிரியை உலகத்தவரின் அவதூறுக்கு ஆளாக்குவது), உச்சாடனம் (எதிரியை ஊரைவிட்டே ஓட்டுதல்), ஸாரதி (பேய், பிசாசு, பில்லி, சூனியம் உபாதைகளைக் களைதல்) ஆகிய பிரயோகங்களும், ஸம்ஹார பிரயோகமும்கூடஅகோராஸ்திரத்திற்கு உண்டு.

இந்த அகோராஸ்திரத்திற்குரிய அதிதேவதையான அகோரமூர்த்தி சீர்காழியிலிருந்து பூம்புகார் செல்லும் சாலையில் உள்ள திருவெண்காடு என்னும் காசிக்கு ஒப்பான க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ளார். சிவபெருமானின் ஈசானம், தத்புருஷம், வாமதேவம், ஸ்த்யோஜாதம், அகோரம் என்ற ஐந்து முகங்களில் அகோரம் என்ற முகத்திற்குரியவர் அகோர மூர்த்தி. புராண காலத்தில் மருத்துவன் என்ற அசுரன் தேவர் உலகத்தைக் கைப்பற்றி ஆட்சி செய்தான். இந்திரன் இங்கு வந்து தவமிருக்கவே நந்தியெம்பெருமானைப் படைத் தலைமை பூண்டு செல்லும்படி சிவன் கட்டளையிட்டார். மருத்துவனால் கடுமையாகத் தாக்கப்பட்டு நந்தி சிவ பெருமானிடம் ஓடி வந்து அழுது அரற்றி முறையிடவே, அது வரை அதோமுகாய் மறைந்திருந்த அகோர முகம் தனி உருப்பெற்று சிவபிரானிடமிருந்து பிரிந்து சென்றது.

---

திரு. பி. சுந்தரராமன், M.A. B.Ed.
பழமர்னேரி.

---

தீக் கொழுந்து போன்ற செஞ்சடைமுடி, கருத்தமேனி, முக்கண்கள், செஞ்சாந்துத் திலகம், தொங்குகின்ற மஞ்சள் நிற மீசை, அதன் கீழ் வளைந்த கோரைப் பற்கள், இது தவிர எட்டுக் கரங்களில் வேதாளம், கமண்டலம், உடுக்கை, கபாலம்; கேடயம், வாம பாசம், ஒலிக்கின்ற மணி, அகோராஸ்த்ரம் எனும் திவ்யாஸ்த்ரம் இவைகளுடன், இடது கால் நிலத்தில் பரவியிருக்க, வலது கால் கட்டை விரலை மட்டும் பூமியில் ஊன்றி ஒடுகின்ற திருக்கோலத்துடன் அகோரமூர்த்தி காணப்பட்டார்.

''வாமே சூலதளே ஸ்திதஸ்தவஹரி;
ஸ்ரீநீலருத்ரஃ
புனர்மத்யே, தக்ஷிணதோவிதிஃ,
ஸ்பவகேகௌரீ, குஹஃ கும்பகே
தண்டாக்ரே கணநாயகோ, திநகரோ
தண்டஸ்ய மூலேஸ்மரன்,
தேஜுத்யாஹி கலக்ரஹோான்
மதரிபூன் அஸ்த்ரேச நிர்நாசய''

என்று அகோர ஸ்தவராஜம் அகோராஸ்த்ரத்தின் பெருமையைக் கூறுகிறது. ஹரி, ருத்ரன், பிரம்மன், சக்தி, ஷண்முகன், கணநாதன், சூரியன் ஆகிய அனைவருமே அகோராஸ்திரத்திலும் மற்ற ஆயுதங்களிலும் தங்கி இருந்தார்கள். அகோரமூர்த்தியின் கையில் இருந்த பானபாத்ரத்தில் மயக்கம் தரும் மதுரசமும், கானஞ்ஜரஸமும் நிரம்பி வழிந்தது. அகோரமூர்த்தியைக் கண்ட மருத்துவன் பயந்து சரணாகதி அடைந்தான். ஒளியுருவாகி இறைவன் திருவுருவில் இரண்டறக் கலந்தான். தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி இறைவனும் 'சுவேதாரண்யம்' என்று புகழப் பெறும் இத்திருவெண்காட்டில் என்றென்றும் அகோரமூர்த்தி உறைவாராயினர். இதனைத் தலபுராணப் பாடல்,

''கருநிறமும் மணிமாலை புனையழகும்
வளைஎயிறும் கவினைச் செய்ய
எரிசிகையும் நுதல் விழியும் நடைக்
கோல இணையடியும் இலகாட்டுக்
கரம் நிலவ மணி பலகை வெண்தலை
வாள கடிதுடியேர் சூல மேற்று
வெருவ மருத்துவனை அடர் அகோர
சிவன் துணைப்பதச்சீர் விளம்பு
வாமே''

என்று குறிப்பிடக் காண்கிறோம். இந்த அகோரமூர்த்தி அஸிதாங்க பைரவர், ருத்ர பைரவர், சண்ட பைரவர், க்ரோத பைரவர், உன்மத்த பைரவர், கபால பைரவர், பீஷண பைரவர், ஸம்ஹார பைரவர்,




திருமலை திருப்பதி தேவஸ்தானம்

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்) கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

சிறப்பு தரிசனம் ரூ. 25

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | |
|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம் | ,, 200 |
| பூலங்கி ஸேவை | ,, 60 |
| திருமஞ்சனம் | ,, 450 |
| கம்பூராக கிண்ணி | ,, 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, 100 |
| ஸஹஸ்ர கலஸாபிஷேகம் | ,, 2500 |
| திருப்பாவாடை | ,, 5000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | |
|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, 2500 |
| பிரம்மோத்ஸவம் | ,, 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, 1000 |
| தெப்போற்சவம் | ,, 1500 |

### வாஹனங்கள்

ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) ,, 73

ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) ரூ. 63

வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) ,, 33

### பிரஸாதங்கள் (கால சோலா தளிகை ஒன்றுக்கு)

| | |
|---|---|
| தத்யோதனம் | ,, 40 |
| புளிஹோரை | ,, 50 |
| பொங்கல் | ,, 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, 65 |
| ஸாகர்பாத் | ,, 85 |
| கேஸரிபாத் | ,, 90 |
| பாயஸம் | ,, 85 |
| சீரா | ,, 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | |
|---|---|
| லட்டு | ,, 450 |
| வடை | ,, 250 |
| போளி | ,, 225 |
| தோசை | ,, 100 |
| ஸுகியம் | ,, 200 |
| ஜிலேபி | ,, 450 |
| அப்பம் | ,, 230 |
| தேன்துளை | ,, 200 |

### நித்திய ஸேவைகள்

| | |
|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, 42 |
| நித்திய அர்ச்சனை | ,, 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.
மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.


செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.


ரூ. 200/-க்கு கிடைக்கும் அமந்த்ரணோற்சவத்திற்கு இரு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர். ரூ. 25/-க்கு கிடைக்கும் சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் நாட்டிலுள்ள ஆந்திரா வங்கியின் சில குறிப்பிட்ட கிளை அலுவலகங்களில் விற்பனைக்குக் கிடைக்கும்.

(ஆ-ர்)

சென்ற இதழ் தொடர்ச்சி

# பழமொழியும் கம்பராமாயணமும்

## அனுமன் :

அனுமன் ஆற்றல் மிக்கவன் என்பது அனைவரும் அறிந்த உண்மை. 'அனுமாருக்குத் தன் பலம் தெரியாதது போல' என்பது பழமொழி. 'யானைக்குத் தன் பலம் தெரியாது' என்னும் பழமொழியை இங்கு ஒப்பு நோக்குதல் வேண்டும். அனுமன் வால் மிகமிக நீண்டது. ஏதாவது ஒரு கதையோ செயலோ மிக நீளமாக இருந்தால் அதன் நீளத்தைக் குறிப்பிட 'அனுமார் வால் போல' என்றும் பொது மக்கள் சொல்லுவார்கள். அனுமன் இலங்கைக்கு இராம தூதனாகச் சென்றபோது தன் நீண்ட வாலையே அரியணையாக ஆக்கிக் கொண்டு அமர்ந்தான். 'இராவணனுக்கு இரத்தின சிம்மாசனம், அனுமானுக்கு வாலே சிம்மாசனம்' என்பது பழமொழி. அனுமான் இராம பக்தன். இராமனுக்கு உயிர்த் தொண்டன். இராமன் பாலும் இராமாயணத்தின்மீதும் அனுமனுக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு இராமன் பெயரை எப்போதும் சொல்லிக் கொண்டே இருப்பான்.

'' வனைகழல் இராமன் பெரும் பெயர் ஓதி
இருந்தனன் வந்தயல மறைந்தே'

(சுந்தர காண்டம்: காட்சிப் படலம்.)

'எங்கே இராமாயணம் அங்கே அனுமார் போல', 'எங்கே இராமாயணப் பிரவசனம் அங்கே அனுமார் பிரசன்னம்', 'இராமாயணம் நடக்குமிடமே அனுமாருக்கு இராமபதம்' என்னும் பழமொழிகள் அனுமனுக்கு இராமன்பால் உள்ள காதலையும், இராமாயணத்தின்மீதுள்ள ஆழ்ந்த பற்றையும் புலப்படுத்துகின்றன. 'பிச்சையெடுத்த தாம் பெருமாள் அதைப் பிடுங்கிய தாம் அனுமார்' என்று அனுமனைப் பற்றி ஒரு நகைச் சுவைப் பழமொழி வழங்கி வருகின்றது. அனுமன் எதையும் சாதிக்க வல்லவன். அவன் மட்டும் நம்முடன் இருந்தால் நமக்கு வேண்டியது வேண்டியவாறு கிட்டும். இவ்வுண்மையை 'அனுமார் இப்போது இங்கிருந்தால் சஞ்சீவி பர்வதம் இங்கே வராதா?' என்னும் கேள்வியைப் பழமொழியாகச் சொல்வதுண்டு.

அனுமன் இலங்கைக்கு எரியூட்டி அழித்தான். இச்செய்தி பழமொழியாகவே அமைந்துவிட்டது. ஓரிடத்தில் பெருந்தீ பற்றி எரிந்துவிட்டால் 'இங்கே லங்கா தகனம் நடந்து விட்டது' என்று பழமொழியாகவே சொல்வதுண்டு.

இராமன் வானரப்படை எங்கிருந்து என்ன செய்தாலும் வியப்பாகவும் வேடிக்கையாகவும் இருக்கும். 'இராமன் பட்டாபிஷேகத்தில் வானரங்கள் விருந்து சாப்பிட்டது போல' என்பது பழமொழி. 'கிஷ்கிந்தாவாசிகள் எங்கே போனாலும் விநோதம் தான்' என்பது மற்றொரு பழமொழி.

## இராவணன்:

இராவணன் ஆற்றல் மிக்கவன். அவன் ஆற்றலைப் பல பாடல்களில் கம்பர் புகழ்ந்து பாடியுள்ளார். ஆற்றலைக் குறித்து இகழும்போது 'இவன் என்ன பத்துத் தலை இராவணனோ' என்று சொல்வது மரபு. இது பழமொழியாக நிலைத்துவிட்டது. இராமன், இராவணன் படை வீரர்களை அழிக்க அழிக்க மிகுதியாக வந்து கொண்டே இருந்தார்கள் என்பதை 'மூட்டைப் பூச்சி இராவணன் சைந்நியம்போல' என்று பழமொழியாகக் கூறுவது மரபு. இராவணன் இராமன் படையைக் கண்டு கலங்கினான். எவ்வாறு கலங்கினான்? இதோ விடை பழமொழி வடிவத்தில் இருக்கின்றது. 'கடன் பட்டார் நெஞ்சம் போலக் கலங்கினான் இலங்கை வேந்தன்.' இதனைக் கம்பர் வாக்கு எனக் கொள்வாரும் உண்டு. அல்ல என்று மறுப்பாரும் உண்டு. இது மேலும் ஆராய்தற்குரியது. பண்டைக் காலத்தில் கடன் வாங்கியவன் கலங்கினான். இக்காலத்தில் கடன் வாங்கினவன் கலங்கவில்லை. கடன் கொடுத்தவன் தான் கலங்கிக் கொண்டிருக்கின்றான். இன்றைய சூழ்நிலையில் இராவணன் அடைந்த கலக்கத்தைச் சொல்லப் பழமொழி தோன்றுமானால் 'கடன் பட்டார் நெஞ்சம் போலக் கலங்கினான் இலங்கை வேந்தன்' என்பதற்கு மாறாகக் 'கடன் கொடுத்தார் நெஞ்சம் போலக்கலங்கினான் இலங்கை வேந்தன்' என்று தோன்றியிருக்கும்.

---

பேராசிரியர். வ. பெருமாள்,
எம்.ஏ., பி.டி., எம்.ஆர். ஏ.எஸ்.,
உரிகம்.

---

## கும்பகருணன்:

'உப்பிட்டவரை உள்ளளவும் நினை' என்னும் பழமொழிக்கு இலக்கியமாகத் திகழ்ந்த கும்பகர்ணன் தூக்கத்தில் மன்னன் என்பது அனைவரும் அறிந்த உண்மை: அவன் உறங்கத் தொடங்கினால் அவனை எழுப்புவது எவ்வளவு கடினம் என்பது இராமாயணம் அறிந்த எல்லோருக்கும் தெரியும். ஆயிரம் அரக்கர்கள் கூடி உறங்கிக் கொண்டிருந்த கும்பகருணனை பெரிய உலக்கையால் அடித்து எழுப்ப வேண்டியிருந்தது என்றால் அவனது உறக்கத்தின் தன்மையை அறிந்து கொள்ளலாம்.

' என்றலுமே அடிவணங்கி ஈரைஞ்
ஞூற்று இராக்கதர்கள்
வன்தொழிலால் துயில்கின்ற மன்ன
வன்தன் மாடணுகி
நின்றிரண்டு கதுப்புமுற'நெடும்உசலம்
கொண்டடிப்பப்

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

1-3-79 முதற்கொண்டு திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் நிகழ்ச்சி நிரல்கள் கீழ்வருமாறு மாற்றஞ் செய்யப்பட்டுள்ளன.

**சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய்க் கிழமைகளில்;**

காலை

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
3-30 முதல் 3-45 வரை : சுத்தி
3-45 முதல் 4-30 வரை : தோமாலா சேவை
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை. அதாவது ஸகஸ்ர நாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் மதியம் 12-00 வரை : ஸர்வ தரிசனம்
மதியம் 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) இரண்டாவது மணி.

மாலை

1-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம்
இரவு 8-00 முதல் 9-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யம் (ஏகாந்தம்)
9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30க்கு: ஏகாந்த சேவை (தனி.)

**புதன் கிழமைகளில் (சஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
3-30 முதல் 3-45 வரை : சுத்தி
3-45 முதல் 4-30 வரை : தோமாலா சேவை (தனி.)
4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாக ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை, (சகஸ்ர நாம அர்ச்சனை) (தனி)
5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை, சேவைக்கான ஏற்பாடுகளை மேற்கொளல் முதலியன.
6-00 முதல் 8-00 வரை ; ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) மணி.
8-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம்
இரவு 8-00 முதல் 9-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யம் (ஏகாந்தம்)
9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை: சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30க்கு: ஏகாந்த சேவை. (தனி.)

**வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)**

காலை

3-00 முதல் 3-30 வரை: சுப்ரபாதம்
3-30 முதல் 3-45 வரை: சுத்தி
3-45 முதல் 4-30 வரை: தோமாலா சேவை (தனி.)
4-30 முதல் 4-45 வரை: பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாக ஸ்ரவணம்.
4-45 முதல் 5-30 வரை: முதல் அர்ச்சனை; சகஸ்ர நாம அர்ச்சனை (தனி)
5-30 முதல் 6-00 வரை: முதல் மணி, பலி, சாத்துமுறை.
6-00 முதல் 8-00 வரை: சாலிம்பு, 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன.
8-00 முதல் இரவு 8-00 வரை: ஸர்வ தரிசனம்
இரவு 8-00 முதல் இரவு 10-00 வரை: பெரிய சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவு மணி ஏகாந்தம்.
இரவு 10-00 முதல் நள்ளிரவு 12-00 வரை: பூலங்கி சேவை.
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை: சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30 க்கு: ஏகாந்த சேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில (அபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை

3-00 முதல் 3-30 வரை: சுப்ரபாதம்.
3-30 முதல் 5-00 வரை: சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.
5-00 முதல் 7-00 வரை: அபிஷேகம்.
7-00 முதல் 8-30 வரை: ஸமர்ப்பணை முதலியன.
8-30 முதல் 9-30 வரை: தோமாலா சேவை, அர்ச்சனை (தனி.)
9-30 முதல் 10-00 வரை: 2வது மணி, பலி, சாத்துமுறை.
10-00 முதல் இரவு 8-00 வரை: ஸர்வ தரிசனம்
இரவு 8-00 முதல் இரவு 9-00 வரை: சுத்தி, இரவு கைங்கர்யங்கள்.
இரவு 9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்
நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை; சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.
காலை 12-30க்கு: ஏகாந்த சேவை (தனி)

குறிப்பு : சுப்ரபாதத்திற்கு ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர். அர்ச்சனை, தோமாலா சேவை, அபிஷேகம் ஆகியவற்றிற்கு ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் அனுமதிக்கப்படமாட்டாது. ரூ. 4/-க்கு விற்கப்படும் சேவானந்தர டிக்கெட்டு வசதிகள் தற்போது நிறுத்தப்பட்டுள்ளன.

பொன்றினவன் எழுந்தாற்போல்
புடைபெயர்ந்தாங்கு எழுந்திருந்தான்!

(யுத்தகாண்டம் கும்பகருணன் வதைப் படலம்.)

மிகுதியாகத் தூங்குபவனைக் குறிப்பிடுமிடத்துக் 'கும்பகருணன் தம்பி இவன்' என்று சொல்வதைக் கேட்கலாம்.

### வாலி.

சுக்ரீவன் அண்ணனாகிய வாலி ஆற்றலில் உயர்ந்தவன். சுருங்கக் கூறுமிடத்து அவன் இராவணனைவிட ஆற்றல் வாய்ந்தவன். வாலி கண்ணுக்கு இராவணன் ஓர் எளிய பூச்சியாகவே தென்பட்டான். 'வாலிக்கு இராவணன் பத்துத் தலைப் பூச்சி' என்பது பழமொழி. எச்செயலும் வரிசை முறையாகத்தான் நடைபெறுதல் வேண்டும். முதலில் செய்ய வேண்டியதை முதலிலும் அடுத்துச் செய்ய வேண்டியதை இரண்டாவதுமாகச் செய்வதுதான் மரபு. செயலில் முறையின் வைப்பு இருத்தல் வேண்டும் என்பதை வலியுறுத்த 'வாலி வதைக்குப் பிறகுதானே பட்டாபிஷேகம்' என்று கூறுவதுண்டு. 'தோட்டம் நிலைத்தல்லவா தென்னம்பிள்ளை நடவேண்டும்' என்னும் பழமொழியும் இவண் ஒப்பு நோக்கத் தக்கது.

### கூனி (மந்தரை):

கைகேயி மிக நல்லவள், தூயவள். அவள் தூய உள்ளத்தில் நஞ்சைப் பாய்ச்சினாள் கூனி. கூனியின் கொடுமையைக் கூறுவதற்கு 'ஒரு கூனி போதுமே ஒன்பது குடியைக் கெடுக்க' என்னும் பழமொழி தோன்றிற்று.

### கைகேயி:

'கரைப்பவர் கரைத்தால் கல்லும் கரையும்' என்பது பழமொழி. தன்னலமற்ற கைகேயியை தன்னலமுள்ளவளாக ஆக்கிவிட்டாள் கூனி. அதன் விளைவாகக் கைகேயி தசரதனிடம் இருவரங்களைக் கேட்டாள். கைகேயியின் வரம் தசரதன் உயிரை மாய்த்துவிட்டுப் பழமொழியாகி விட்டது. 'கைகேயி கேட்ட வரம் போல' என்பது பழமொழி.

### தாடகை:

தாடகை ஓர் அரக்கி. கொடிய அடங்காப் பிடாரியை மனைவியாகப் பெற்றவன் 'அங்கொரு தாடகை இராமாயணத்திலே இங்கொரு தாடகை என் வீட்டிலே' என்று சொல்லுவான். இச்சொல் பழமொழியாகி வேரூன்றிவிட்டது.

### மாரீசன்:

இராவணனுக்குத் துணையாக மான் வடிவத்தில் காட்சியளித்தான் மாரீசன். அவனுடைய கபட நாடகத்தை விளக்கப் 'பொய்மான் காட்டிலே போய்ப் பார் மாரீசனை', 'மாரீசனைப் பார்க்கப் பொய்மான் கரட்டுகா போகணும்? இவனைப் பார்த்தால் போதாதா?' என்னும் பழமொழிகள் தோன்றின. 'பொய்மான் கரடு' தமிழ்நாட்டில் சேலத்திற்கு அருகில் இருக்கின்றது.

### சாம்பவான்:

இராமாயணத்தில் முதுபெரும் அறிஞனாகவும் வல்லவனாகவும் விளங்கியவன் சாம்பவான். சாம்பவான் என்னும் பெயர் தமிழில் மட்டுமன்று இந்திய மொழிகளில் பழமொழியாகிவிட்டது. அவர் கணக்கில் நிபுணர் என்பதை அவர் கணக்கில் சாம்பவான் என்று சொல்வதுண்டு.

### கம்பர் பயன்படுத்திய பழமொழிகள்

கம்பர் காலத்தில் பல்லாயிரம் பழமொழிகள் வழக்கில் இருந்தன என்பதற்கு அகச் சான்றுகள் உண்டு. கம்பர் அவர் காலத்தில் வழங்கிய பல பழமொழிகளைத் தம் காப்பியத்தில் கையாண்டுள்ளார். அவை எல்லாவற்றையும் தொகுத்து ஆராயத் தொடங்கின் இக்கட்டுரை மிகப் பெரிய நூலாக விரிந்துவிடும். எனவே விரிவஞ்சி, 'பானை சோற்றுக்குப் பருக்கை பதம்' என்னும் பழமொழிக்கு ஏற்ப ஒரு சில பழமொழிகளை மட்டும் இவண் ஆராய்வோம்.

'பாம்பாறியும் பாம்பின் கால்' என்பது இன்றும் வழக்கில் உள்ள பழமொழி. 'பாம்பின் புற்று பாம்பிற்குத்தான் தெரியும்' எனபது இப் பழமொழியின் கருத்து. இப்பழமொழியைக் கம்பர் எடுத்தாண்டதுடன் இது பழமொழி என்று மிகத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

'பாம்பறியும் பாம்பின்கால் என மொழியும்
பழமொழியும் பார்க்கி லீரோ'

(கம்பராமாயணம், ஆரண்ய காண்டம்: சூர்ப்பணகைப் படலம்.)

'புலி அருகில் இருக்கக் குட்டியைப் பிடிக்க முடியாது' என்பது பெரு வழக்கில் உள்ள பழமொழி. இப்பழ

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.




# ஸ்ரீ வேங்கடேஶ்வர சுவாமி கோயில்

மற்றும்

# ஸ்ரீ சந்திரமௌளீஶ்வர சுவாமி கோயில்

## தி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ்' உ.பி.

### ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸவர சுவாமி கோயில் | ஸ்ரீ சந்திரமௌளீ-ஶ்வர சுவாமி கோயில் |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| அர்ச்சனை | டிக்கெட் ஒன்று | 2-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| சகஸ்ரநாம அர்ச்சனை | ,, | 5-50 | 5-00 |
| தோமாலந்தார தரிசனம் | | 5-00 | — |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அம்மையார் கோயில் | ஸ்ரீ பார்வதி அம்மையார் கோயில் |
|---|---|---|---|
| அர்ச்சனை | ,, | 1-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| நைவேத்தியங்கள | | ரூ. |
|---|---|---|
| தத்யோதனம் | முழுத் தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொங்கல் | ,, | 60-00 |
| இனிப்புப் பொங்கல் | ,, | 65-00 |

குறிப்பு : ஒவ்வொரு நைவேத்தியத்திற்கும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொண்டு சிங்கமொருவுக்காக ரூ. 3/- செலுத்த வேண்டும். மேலும் அரைக்கட்டண விகிதத்தில், இறைவனுக்கு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள் செய்விக்கலாம்.

மொழி மக்கள் அனைவரும் அறிந்ததே என்பதைக் கம்பரே உறுதியாகக் கூறியுள்ளார்.

'புலிதானே புறத்தாகக் குட்டிகோட்
படாதென்னும்
ஒலியாழி உலகுரைக்கும உரை
பொய்யோ'

(கம்பராமாயணம்: ஆரணிய காணடம்; சூர்ப்பணகைப் படலம்)

கம்பர் இப்பழமொழியை உரை என்று குறிப்பிட்டுள்ளார். 'எறும்பு முதல் யானை வரை' என்பது பழமொழி. இப்பழமொழியைக் கம்பர் தம் பாடலில் கையாண்டுள்ளார்.

'எறும்பினங் கடையுற யானையே முதல்'

(ஆரண்ய காண்டம்: கவந்தன் வதைப் படலம்.)

'பூனையிடம் அகப்பட்ட கிளியைப் போல' என்பது இன்றைய வழக்கில் உள்ள பழமொழி. கம்பர் இதனைப் 'பூசை நெடுவாயின் மறுகும் பஞ்சரக் கிளி' (ஆரணிய காண்டம், விராதன் வதைப் படலம்) என்று வழங்கியுள்ளார். 'குரங்கு கையில் பூமாலை கிடைத்ததுபோல' என்னும் பழமொழி இங்கு ஒப்பு நோக்கத் தக்கது. 'வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவது போல' என்பது அனைவரும் அறிந்த பழமொழி. இப்பழமொழி கம்பராமாயணத்தில் இடம் பெற்றிருக்கின்றது.

## கம்பர் வாய்மொழி பழமொழி.

கம்பர் வாசகங்களில் பல பொது மக்களால் நன்கு அறியப்பட்டுப் பழமொழிகளாகவே ஆகிவிட்டன. எடுத்துக்காட்டாக ஒன்றை மட்டும் குறிப்பிட்டிருக்கின்றோம். 'இராமனுக்கும் இராவணனுக்கும் நடைபெற்ற போரில் இராமன் வெற்றி முகத்திலும் இராவணன் தோல்வி நிலையிலும் இருக்கின்றனர். இராவணன் படைக்கலம் இழந்த நிலையில் நிற்கின்றான். அப்போது இராமன் அருள் உள்ளத்துடன் இராவணனை நோக்கி, ''இன்று போய்ப் போர்க்கு நாளை வா'' என்று அருள் உணர்ச்சியுடன் சொன்னான். இராமன் கூற்றாக அமைந்த கம்பர் வாய்மொழி பழமொழியாகிவிட்டது. இவ்வாறாகப் பழமொழிகள் துணை கொண்டு கம்பராமாயணத்தை ஓரளவு இக்கட்டுரையில் கண்டோம்.

முற்றும்.

# திருமலை ஒழுகு

## திருப்பதிக் கோயில்கள் :

இராமாநுசர், கோவிந்தராசரைத் திருப்பதியில் திருப்பிரதிட்டை செய்தபின், கட்டியம் யாதவராயன் அவர் சந்நிதியின் முன் ஒரு மண்டபம் கட்டினன். அதன் பெயர், திருச்சித்திரகூட மண்டபம என்றும், தில்லைக்கு வாய்த்தான் மண்டபம் என்றும் கூறப்படுகின்றது. அவன், வேறு பல மண்டபங்களையும, திருப்பதியில் இராமாநுசர் கோயிலையும், திருமாமணி மண்டபத்தையும் (கல்யாண மண்டபம்) கோபுரங்களையும் கட்டுவித்தான். இவன், இராமாநுசர் காலத்திற்குப் பின்னும வாழ்ந்திருந்தவன்.

வீரநரசிங்க யாதவராய அரசனல் வீர நரசிங்கப்பெருமாள் வடிவம் கி.பி. 1240-ல் திருப்பதியில் நிறுவப்பட்டது. இஃது, இப்போதுள்ள நரசிங்க தீர்த்தத்திற்கு அருகில் உள்ளது. இப்பகுதி முற்காலத்தில் நரசிங்கராயபுரம் என வழங்கப்பட்டது. இப்பெருமான் பெயர் 'மேலைச்சிங்கர்' எனக் கல்வெட்டில் காணப்படுவதால், திருப்பதியின் மேற்குப் பகுதியில் இவ்வுருவம் நிறுவப்பட்டதெனக் கருதுவதற்கு இடம் உண்டு.

சாளுவ நரசிம்மன் கி.பி. 1482-ல் திருமலை யடிவாரத்தில் உள்ள முதற் கோபுரத்தைக் கட்டினன். இதற்கு இராயர் கோபுரம் என்றும் பெயர். (இக்கோபுரத்தின் மேற்பகுதி இடியாலும் மழையாலும் அண்மையில் விழுந்துவிட்டது. இப்போது திருமலை திருப்பதி தேவஸ்தானக் கமிட்டியார் இதனைப் புதுக்கிவருகிறார்கள்). இவன் திருமலையிலும் திருப்பதியிலும் வேறு சில கோபுரங்களையும் மண்டபங்களையும் கட்டுவித்தான். (Vol. II. 28) அன்றியும், திருமலைக்குக் காப்பாக இருப்பதற்குஅழகியசிங்கர் திருவுருவை அடிவாரத்தில் கந்தாடை இராமாநுஜ ஐயங்கார் கூறியபடி, கி.பி. 1482-ல் (273-G. T.) நிறுவினன். இப்பெருமான் 'அடிப்புளி அழகிய சிங்கர்' எனவும், 'ஸ்ரீநிவாசபுரம் அழகிய சிங்கர்' எனவும் கல்வெட்டுகளில் குறிக்கப் பெற்றுள்ளார். (Vol. III. No. 11) அடிப்புளிக்கு ஸ்ரீநிவாசபுரம் என்று வேறு பெயர் இடப்பட்டிருத்தலும் கூடும் எனத் தோன்றுகிறது. 'அடிப்புளி' என்பது இப்போது 'அலிபிரி' எனத் தவருக வழங்கப்படுகிறது. இராமாநுசர், திருமலை அடியிலிருந்த ஒரு புளியமரத்தின அடியில் இருந்து இராமாயண பாடம் கேட்டு வந்தார். அப் புளியமரம் இருந்த இடம் அடிப்புளி என்று வழங்கப்பெற்றது. இவ்வுண்மை யறியாதார் சிலர், இஃது 'அடிப்படி' என்றிருத்தல் வேண்டும் எனக் கூறுகின்றனர்.

'' திருபப தியும்ஆழ்வா தீர்த்தமும் பூங்கா
விருப்பும் அடிப்புளியின் வீறும்''
(கண்ணி. 98)

என்று திருவேங்கட உலாவிலும் இவ்வடிப்புளி கூறப்பட்டிருத்தல் காண்க.

முன்காலத்தில் ரங்கபூபாலன் என்னும ஒரு பாண்டிய மன்னன், பல அரசர்களைத் திசைதோறும் சென்று வெற்றி பெற்றுத் திருமலையில், தன் வெற்றிககறிகுறியாக ஒரு வெற்றிக் கம்பம் நாட்டினன் எனவும், அவனே இரகுநாதன் கோயிலைக் கட்டி, அப் பெருமானை இளைய பெருமாளோடும், சீதாதேவியோடும் அதில் நிறுவினன் என்றும் திருமலை ஒழுகு (பக். 100) கூறுகின்றது. இப்பாண்டிய மன்னன் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனதல் வேண்டும். இவனே, திருமலைக் கோயிலுக்கு, கி. பி. 1245-ல் பொற்கலசம் அமைத்தான் என்று (T. T. 172) கல்வெட்டு அறிவிப்பதால், இம்மன்னனே முதலில் அக் கோயிலைக கட்டியவனதல் வேணடும். இவன் திருமாலுக்கு அடியவன். பல ஆண்டுகளுக்குப்பின் அக்கோயில் மிகப் பள்ளத்தில் ஆழ்ந்துவிட்டது. அதற்குக் காரணம ஊரின் தெருக்கள் உயர்ந்துகொணடே வந்ததுதான். இதனை யறிந்த கந்தாடை இராமாநுஜ ஐயங்கார், சாளுவ வீரநரசிம்மராயன் கட்டளை பெற்று, கி. பி. 1480-ல், அக்கோயிலை உயர்த்தி இரகுநாதன் திருவுருவத்தையும் மேலுக்குக் கொணர்ந்து, மண்டபம் முதலியவற்றைக் கட்டினர். ''நரஸிம்ஹராய உடையார்க்கு தர்மமாக திருபபதி—பணம் இட்டு கோயிலும் கட்டுவித்து ரகுநாதனை'' (Vol. II. 73–74) என்று வரும் கல்வெட்டினைக் காண்க.

குமார ராமாநுச ஐயங்கார் என்பவர், அச்சுத தேவராயன் தருமமாக இவ்விரகுநாதனுக்கு, கி.பி. 1530-ல் திருத்தேர் ஒன்றைச் செய்து, பங்குனித் திருநாளில் எட்டாம் நாள், அத்தேரில் பெருமானை ஏற்றி விழாச் செய்தார். கோவிந்தராசர் கோயிலில் ஒரு இரகுநாதர் நிறுவப்பெற்றிருக்கிறர். இவர், கி. பி. 1488-ல் பிரதிட்டை செய்யப் பெற்றவர். முதலில் தோன்றிய இரகுநாதன் இவருக்கு முன் தோன்றியவர் ஆதலாலும், வடிவத்தில் பெரியவர் ஆதலாலும், அவரைப் பெரிய ரகுநாதன் என்று சொல்லுவர். இவர் கோயில் அமைந்துள்ள இடமும், அதனைச்சார்ந்துள்ள தெருக்களும் இரகுநாதபுரம் என வழங்கப்பட்டன.

பெரிய இரகுநாதன் கோயிலுக்கருகே அப்பாண்டிய மன்னன், தன் குலத்தவரான குலசேகராழ்வாருக்கு ஒரு கோயில் கட்டினன். (திருமலை ஒழுகு. பக். 100) அக்கோயில் இருந்த இடம் குலசேகரபுரம் என வழங்கப்பட்டு இப்போது துளசாபுரம் என

மருவி வழங்கப்படுகிறது என்று சிலர் கருதுகின்றனர்.

ஆழ்வார் தீர்த்தக் கரைக்கண் உள்ள நம்மாழ்வார் கோயிலை, பல்லவ ராயர் என்னும் வானெடுத்த கையழகி யார் என்பவன் கி. பி. 13-ம் நூற்றுண்டின் தொடக்கத்தில் கட்டி ஆழ்வாரைப் பிரதிட்டை செய்தான். இவன் பெயர், கடப்பை ஜில்லாவி லுள்ள நந்தலூர்க் கல்வெட்டில், ஜடாவர்மன், திரிபுவனச் சக்ரவர்த்திகள் சுந்தர பாண்டியன் II-ஆட்சிக் காலததில் ஒன்பது, பத்தாம் ஆணடுகளில் இருந்ததாகக் காணப்படுகின்றது. இவன் பல்லவர் மரபைச் சேர்நத ஒரு சிற்றரசனுகலாம் போலும். இவன் கி. பி. 1285-ககு முன்னும் பின்னும் இருந்திருத்தல் வேணடும்.

'' ஸ்வஸதிஸ்ரீ ஆழ்வாருடைய
விமானமும திருமண்டபமும்
மாளிகையும பாணடிமண்டல
மிழலைககூறறத்து நடுவிறகூறு
துஞ்சலுருடையான் வாந
எடுதத கையழகியரான
பல்லவராயர் தர்மம;''

(Ins. Vol. I No. 57)

என்னும் கல்வெட்டினுல் மேற் கூறப்பட்ட செய்தி விளக்கமாகிறது. ஒரு முனிவர், திருமலை யடிவாரத்தில் குளக்கரையில வாழ்நது, கலியுகத்தில் மக்கள் அறநெறிகளைக் கைவிட்டிருப் பதை நினைத்து அவாகளுக்குத் திவ் விய ஞானத்தையும், பிரம வித்தை யையும் கற்பித்துத்துக் கொண்டிருக் கிருர் என்னும் கருத்துள்ள வட மொழிக் கல்வெட்டொன்று அவ்வாழ் வார் கோயிலின்மேல் மதிற் சுவரில் காணப்படுகிறது. (Ins. Vol. I. 58) இதைக் கொண்டு, இதில் குறிக்கப் பெற்ற முனிவர் நம்மாழ்வாரே யாவர் என்று முடிவு செய்கிருர்கள் ஆராய்ச்சி யாளர். இது வேருெருவரைக் குறிப் பதாகவும் இருத்தல் கூடும். அச்சுத ராயன கி. பி. 1513-ல் திருமலைக்கு வந்தபோது, ஆழ்வார் தீர்த்தக் கரை களுக்குக் கற்படிகளைக் கட்டி, கிழக்கு மேற்கு ஆகிய இரு திசைகளிலும் சந்தியா வந்தன மண்டபங்களையும் நிறுவி, அத்தீாத்தத்தின் நான்கு மூலை களிலும் திருவாழி பொறிக்கப் பெற்ற கற்களை நாட்டி, சக்கர தீர்த்தம் என்று பெயரிடடுத் திருவேங்கடமுடை யானுக்குரியதாமபடி செய்தான். இவன், திருவாழிக் கற்களை நாட்டிய தறகுக் காரணம், அறம், பொருள், இன்பம், வீடு என்னும நால்வகைப் பேறுகளையும் பெறுவதற்காகவேயாம் என்று கல்வெட்டு அறிவிக்கிறது. (Ins. Vol. IV No. 10).

காளத்திச் சைவர்கள், திருவேங் கட நாட்டரசன் இறந்து போனதைத் தமக்குத் தகக வாய்ப்பாகக் கொண்டு, அத்தீர்த்தம் கபில தீர்த்தம் என்றும், அதற்குரியவர் கபிலேச்வரர் என்றும் வழக்கிட்டு உரிமை கொண்டாடத் தொடங்கிய போது, ஒரு ஏகாங்கி நாராயண ஐயங்கார் என்னும் ஏகாங்கி, சைவர்களோடு வாதம் புரிந்து, அஃது ஆழ்வார் தீர்த்த மென்று நிலைநாட்டித் திருவாழிக் கல்லை நாற்புறங்களிலும் நடுவித்தார் என்று திருமலை ஒழுகு (பக். 102) அறிவிக்கின்றது.

மற்ருெரு கல்வெட்டு (Vol. II. No. 29) கோவிந்தராஜர் உபாகர்ம நாளில் ஸ்ரீ தேவி, பூதேவிகளுடன், தேவர்கள் வந்து நீராடித் தூய்மை யடையும் தீர்த்தத்தில், இராமாநுசர் ஏற்பாட்டின்படி ஸ்நானத்திற்கு எழுந்தருள வேண்டும் என்று தெரிவிக் கின்றது. இதன் காலம் கி.பி. 1467.

இக்கல்வெட்டினுல், இராமாநுசர் காலத்தில் இந்த ஏற்பாடு செயயப் பட்டது என்பது தெளிவு. கோவிந்த ராசர் இன்றும் தீர்த்தவாரிக்காக ஆழ் வார் தீர்த்தத்திற்கு எழுந்தருளு கின்ருர். இத்தீர்த்தத்தைவிடத் தூயதீர்த்தம் திருப்பதியில் எங்கு மில்லை. எனவே, கோவிந்தராசர்க் குரிய தீர்த்தமாக இராமாநுசர் ஏற் படுத்தியது ஆழ்வார் தீர்த்தமே. ஆனுல் கி. பி. 1531-க்கு முன் உள்ள கல்வெட்டுக்களில் இத்தீர்த்தம் ஆழ் வார் தீர்த்தமென்ருே, கபில தீர்த்த மென்ருே குறிக்கப்படவில்லை. இது மிகத் தூயதென்று மட்டும் அவை அறிவிக்கின்றன.

எனவே, இதற்கு முதலில் என்ன பெயரிடப்பட்டது என்பது தெரியா விடினும், இது கோவிந்தராசர்க்குரிய தாக இராமாநுசரால் ஏற்பாடு செய் யப்பட்டது என்பதில் ஐயமில்லை.

**ஆழ்வார் தீாத்தம் அலலது ஸ்ரீகபிலேஸ்வர சுவாமி கோயில-திருப்பதி.**



நம்மாழ்வார் கோவில், இத்தீர்த்தக் கரையில் இருப்பதனுலோ அன்றிச் சக்கரத்தாழ்வார் தீர்த்தவாரியில் மூழ்கித் தூய்மை செய்வதனுலோ, இதற்கு ஆழ்வார் தீர்த்தம் என்று பெயர் வழங்கி இருத்தல் வேண்டும். அச்சுதராயன் கி. பி. 1531-ல் சக்கர தீர்த்தம் என்று பெயரிட்டான்.

கந்தாடை இராமாநுஜ ஐயங்கார், இத்தீர்த்தத்தின் மேற்குக் கரையில் திருவேங்கடமுடையான் சந்நிதிக்குத் தொண்டைமான் சக்ரவர்த்தி போய்க் கொண்டிருந்ததாகக் கருதப்படும் குகையில் நரசிம்மரையும், தென்கரையில் லக்ஷ்மி நாராயணனையும் பிரதிட்டை செய்து, பிற மதத்தவரால் தீங்கு வாராது தடுத்தனர் என்கிறது திருமலை ஒழுகு.

தாளப்பாக்கம் திருமலை ஐயங்கார் ஆழ்வார் தீர்த்தத் தென்கரையில் தீர்த்தவாரி மண்டபம் கட்டி அதில் லக்ஷ்மி நாராயணப் பெருமாளை நிறுவினுர் என்பது 2. 6. 1546-ல் எழுந்த கல்வெட்டு. (Vol. V. No. 97).

கபிலேச்வரர் கோயிலில் ஒரு கல்வெட்டுக் காணப்படுகிறது. அது,

"ஸ்வஸ்திஸ்ரீ கோட்டூர் உடையாந்ராயந் ராஜேந்த்ர சோழனை பிரமமாராயன் முனைய தாயன எடுத்ததிருமாளிகை"

என்பது. இஃது, இரண்டாம் இராஜேந்திர சோழனை முதற் குலோத்துங்கன் காலத்ததால் (கி. பி. 1070—1075) வேண்டும். இவன் கட்டிய திருமாளிகை கபிலேச்வரர் கோயிலாக இருக்கலாம். ஏனெனில், இவன் சைவத்தில் மிக ஊற்றமுள்ளவன். எனவே, இது சிவபிரான் கோயில் எனல் வேண்டும்.

இங்குத் திருமாளிகை என்பது கோயிலைக் குறிக்காது எனவும், எவருடைய கோயில் என்று விளக்கமாக எழுதப்படாதிருத்தலால், இது கடவுளுக்குரிய கோயில் என்றல் பொருந்தாது எனவும், வைணவ மரபில் ஆசார்யர் இருக்குமிடத்தைத் திருமாளிகை என்று சொல்வது பெருவழக்காதலின், நம்மாழ்வாருக்காக முதலில் எடுப்பித்தது இத்திருமாளிகை எனவும் கூறுவர் ஒரு சிலர்.

ஆழ்வார் தீர்த்தத்தில் நான்காம் சுனையில் திருவேங்கடமுடையான் திருவுருவம் ஒன்று இருந்ததாகவும், அதற்குச் சொட்டைத் திருமலை நம்பி ஸ்ரீநிவாஸ ஐயங்கார் நாள்வழிச்சந்தி ஏற்படுத்தியதாகவும் தெரிகிறது.

"ஆழ்வார் தீர்த்தத்தில் நாலாஞ் சுனையில்
திருவேங்கடமுடையான் நாளவழிசந்தி
விட்டவன் பிரஸாதம்"

என்பது அச்செய்தியை விளக்கும் கல்வெட்டு. இப்போது, அவ்வுருவம் எங்குளது என்பது தெளிவாகவில்லை.

தவிர, இவ்வாழ்வார் தீர்த்தம் திருவேங்கடமுடையானுக்கு உரிய தென்றும் (Vol. IV. No. 10) ஒரு கல்வெட்டினுல் அறிகிறோம். அது,

"திருவேங்கடமுடையான் திவ்ய
தீர்த்தமான
திருப்பதியில் ஆழ்வார் தீர்த்தத்தை"

என்பது. இத்தீர்த்தத்தின் அருகில் அன்ன சத்திரங்கள் பல இருந்தன. நம்மாழ்வாருக்குத் திருவிழாச் செய்யும்போது. திருவத்யயனம் பத்தாம் திருநாளாகிய சாத்துமுறை விசாக நட்சத்திரத்து நாளில், ஆழ்வார் தீர்த்தக் கரையில் ஆழ்வார் திருத்தேரில் ஏறியருளித் திருக்கோயிலை வளையவரும் வழக்கம் கி பி. 1544-ல் இருந்தது. இப்போது அவ்விழா நடப்பதில்லை.

திருப்பதியில் பாஷ்யகாரர் அக்ரகாரத்தில் கோவிந்தராசர் வடவண்டை மாடவீதியில் கி பி. 1544-ல், ஒரு நம்மாழ்வார் கோயிலை ஆரவீடு கொண்டராஜா எனபவன் கட்டினுன். பின்னர், அதையொட்டிக் கிழக்கில் இருககும இராமாநுசகூடத் (பெரிய ஜீயர்மடம்)திற்கு ஆண்டு ஒன்றுக்கு 5713 ரேகைப் பொன் வருவாயுள்ள பத்து ஊர்களைத் தானமாகத் தந்து வைணவ யாத்திரிகர்களுக்கு உணவளிக்க ஏற்பாடு செய்தான். இவ்விராமாநுச கூடத்தில ஒரு நாளைக்கு ஏறக்குறைய 500 மரக்கால் அரிசி செலவிடப்பட்டதாக (Vol. V. No. 125) அறிகின்றோம். இந்நம்மாழ்வார் சந்நிதிக்கு இராமாநுசகூடத்து நம்மாழ்வார் கோயில் என்பது பெயர். இங்கு கி. பி. 1553-ல் பன்னிரண்டு நாட்கள் திருவிழா நடந்து வந்தது.

ஆழ்வார் தீர்த்தத்திற்குப் போகும் வழியில் கிழக்காக ஒரு கோபுரம் மட்டும் காணப்படுகிறது. அஃது அச்சுதப் பெருமாள் கோயில். அச்சுத தேவராயனுல் கட்டப்பட்டுப் பெருமாளின் திருவுரு நிறுவப்பட்டது. அதைச் சுற்றிலும் 120 வீடுகள் அடங்கிய அக்ரசராத்தைக்கட்டி அதற்கு அச்சுதாரயபுரம் என்று பெயரிட்டான் அவன். கி. பி. 1538-ல் திருவேங்கடமுடையான் ஸ்ரீ பண்டாரத்திற்கு நானூறு பணம் செலுத்தி, அச்சுதப்பெருமாள் கோயிலும், அக்ரகாரமும் கோட்டூரில் கட்டுவதற்கு நிலம் வாங்கினுன். (Vol. 4. No 108) அவ்வரசன காலத்துக்குப் பின், அக்கோயிலும ஊரும் சீர்கெட்டுப் போய் விட்டன. ஆனுல், கோபுரம் ஒன்று மட்டும் இதற்குச் சான்று பகர்கின்றது. இப்போது நரசிம்ம தீர்த்தக் குளக்கரையில் சிறிது உடைந்துபோன நிலையில் பூசையின்றி அமைக்கப்பட்ட திருவுருவம் அச்சுப் பெருமானே என்கின்றனர். அதன் அழகும், பெருமிதமும் காண்பவர் மனதைக் கொள்ளை கொள்ளும்.

திருமங்கையாழ்வார், நாதமுனிகள், திருக்கச்சிநம்பி, வரதராசப் பெருமாள் முதலானவர்களுக்குக் கோயில்களும், கோவிந்தராசர் கோயிலில், திருமலை நம்பி, இராமாநுசர் (கி. பி. 1220) கூரத்தாழ்வார், மதுரகவியாழ்வார் முதலியவர்களின் கோயில்களும் பல்வேறு காலத்தில் கட்டப்பட்டன. அடிப்புளியில் கி. பி. 1300-க்குமுன் பெரியாழ்வார்கோயில் கட்டப்பட்டது.

சாளுவ நரசிம்மனுல், திருமலையிலும் திருப்பதியிலும் இராமாநுச கூடங்கள் கட்டப்பட்டு அவற்றிற்குத் தன் ஆசார்யரான கந்தாடை இராமாநுச ஐயங்காரைத் தலைவராக அவன் நியமித்தான். இவற்றின் வரலாறுகள் விரிப்பிற் பெருகும்.

(தொடரும்)



# ஸ்ரீ அன்னமாச்சார்யா ஜெயந்தி விழா

(12-5-79 முதல் 14-5-79 வரை)

இவ்விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றிய தி. தி. தேவஸ்தான கலாக்ஷேத்திரத்தின் சிறப்பு அலுவலர் திரு. பி. ரஜனிகாந்தராவ் அவர்கள் தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்களால் கௌரவிக்கப்பட்டார்.



13-5-79 அன்று இவ்விழா ஒட்டி திரு. சந்தியாவந்தனம் ஸ்ரீநிவாசராவ் அவர்களின் இன்னிசைக் கச்சேரி திருப்பதியில் ஸ்ரீ அன்னமாச்சார்யா கலாமந்திரத்தில் நடைபெற்றது.



அண்மையில் தி. தி. தேவஸ்தான ஆஸ்தான வித்வானாக நியமிக்கப்பட்ட மிருதங்க வித்துவான் திரு. யெல்லா வெங்கடேஸ்வரராவ் அவர்கள் இவ் விழாவின் போது (14-5-79) தி. தி. தே. செயலாட்சித்தலைவரவர்களால் கௌரவிக்கப்பட்டார்.



**அண்மையில்** தி. தி. தேவஸ்தான ஆஸ்தான வித்வானக நியமிக்கப்பட்ட ஓவியக்கலைஞர் திரு. பாபு அவர்கள், இதுபோது (14-5-79) செயலாட்சித் தலைவரவர்களால் கௌரவிக்கப்பட்டார்.



அண்மையில் தி. தி. தேவஸ்தானத்தின் ஆஸ்தான வித்வானக நியமிக்கப்பட்ட திரு. சந்தியாவந்தனம் ஸ்ரீநிவாசராவ் அவர்கள் தி. தி. தே. செயலாட்சித்தலைவரவர்களால் 14-5-79 அன்று கௌரவிக்கபபட்டார்.



தி. தி. தேவஸ்தான ஆஸ்தான நாட்டியக் கலைஞராக அண்மையில் நியமிக்கப்பட்ட குமாரி. யாமினி கிருஷ்ணமூர்த்தி அவர்கள் தி. தி. தே. செயலாட்சித் தலைவரவர்களால் 14-5-79 அன்று கௌரவிக்கப்பட்டார்.

# மலைமீதிலே காணலாம்....

முருகனடி எஸ். ஜெயராமன்
சேலம்டவுன்

## முன்னுரை

ஆண்டவனுடைய கருணையின் இரகசியத்தை யாரே அறிவார். அவ்வாண்டவனை அடையப் பக்தியே முக்கியமான வழி. பக்தி இல்லாது போய் விட்டால் மனிதனுக்குப் பெரு நஷ்டமாகும். பக்தி சக்தியை அளிக்கும். துன்பமாகிய பெரிய சாகரப் பள்ளத்துளாழ்ந்து கரைகாணு திளைக்கும் நம்மையெல்லாம் காக்க கருணையினுல் மேடேறி, குன்றேறி நம்மை அழைக்கின்ருன் குமரன். ஆன்மீக உணர்ச்சியிலே, பள்ளத்திலே பின் தங்கி இருக்கின்ற நமமையெல்லாம் மேலே தூக்கி உயர்த்தி விடுவதற்காகவே நம் முன்னேற்றத்திற்காக வேண்டியே ஆண்டவன் மலைமீதிருக்கிருன் போலும். வாவாவென்று இரு கை யசைத்து வரவேற்கிருன் வடிவேலன். நாம் சென்று தொழுவோமாக.

## மலைத்தெய்வம்

எல்லாம் வல்ல ஈஸ்வரனுக்கு வெள்ளியங்கிரியாகிய திருக்கைலாய மலை. மாலுக்கு ஏழுமலை. மால் மருகனுக்கோ பழநிமலை விராலிமலை, சுவாமிமலை என்று இப்படி மலைக் கோயில்கள் பல. மாமனுக்கும் மலை, மருமானுக்கும் மலை என்ற போதிலும் முருகப் பெருமானே மலைத்தெய்வம் என்று சிறப்பித்துப் போற்றப் படுகிருர். மலைகளையே தமக்கு ஆலயங்களாகக் கொண்டுள்ளார். குறிஞ்சி என்னும் மலை வளங்களையே தமக்குக் கோயிலாகக் கொண்டவராதலின் ''சிரகிரி வேலன்'' என்னும் கந்தர் சஷ்டி கலச வசனப்படி, குறிஞ்சித் தெய்வம், குறிஞ்சி வேந்தன் என்ற வாக்கியங்கள் குமார மூர்த்தியை குறிக்கின்றனவாகின்றன. திருமுருகாற்றுப்படையிற் காணப்பெறும். அறுபடை வீட்டுத் தலங்களில்குன்று தோருடல் (குன்றுகள் தோறும் விளையாடல்) ஒன்ருக ஏற்பட்டிருப்பது அந்தப் பெருமான மலைத்தெய்வமென்பதைக் காட்டுவதற்கேயாம்.

## குறிஞ்சிக்கோன்

குறிஞ்சி - மலையும் மலைசார்ந்த நிலமுமாம். இந்நிலக்கடவுளை சேயவன் என்று குறிப்பிடுகின்றது பழந்தமிழிலக்கணம்.

'' சேயோன் மேய மைவரை யுலகமும்''
(தொல்காப்பியம்)

எனவே, மலைச்சாரலிலுறையும் இறைவன் முருகன் எனக்கொள்க. பரங்கிரி, செந்தின் மாமலை, பழநித் திருவாவினன்குடி சுவாமிமலை, பல மலைகளுமாகிய குன்று தோருடல், திருச்சோலைமலை ஆகிய ஆறுபடை வீடுகளான மலைத் தலங்களிலும் எழுந்தருளியுள்ள தலைவன என்றும் கூறலாம்.

அண்ணுமலையின் மகன், மலைமகள் மைந்தன், மலையிடித்த மாவீரன், மலை (வாழ்குற) மகள் மணுளன் ஆதலின், குகவேள் மலைநிலைத் தெய்வம் என்னற்கு ஐயமுணடோ?

'' குறிஞ்சிக கிழவனென் றேதும்
குவலயமே ''
குறிஞ்சி வாழ் மறவர் நாயகர் ''
(அருணகிரி)

சிவகுமாரனுகிய முருகன் தந்தையை போலவே மலைவாசி. மலைகளுக்கெல்லாம் தலைவன், மனப்பிணியைப் போக்க மால் மருகன் மலைமேல் நின்று காட்சி தருகிருன்.

## முருகன் பெருமை

முருகன் என்ருல் தெரியாத குழந்தைகளே இருக்கமாட்டார்கள். குழந்தைகட்கு முருகனை உவமையாக கூறும் வழக்குப் பழங்காலம் முதல் நிகழ்கிறது. குழந்தை உள்ளம் படைத்தவர்களின் அன்புக்கு அகப்படுகிறவன் அறுமுகன்.

''அன்பினுடன் கூறுமவர் சிந்தை குடிக்கொண்டோனே'' என்பது குமர குருபரர் வாக்கு. முருகன் வழிபாடு தொன்றுதொட்டு நிகழ்ந்து வருகின்றதை தொல்காப்பியமும் கூறுகிறது. மலர் மணம் போன்றவன் வேலவன். குழந்தையாய், தண்டபாணியாய், கல்யாண முருகனுய்,பாலனுய், சுவாமி நாதனுய், குமர குருபரனுய், அவரவருக்கேற்ற வகையிலே அருள் பாலித்து விளங்குகிருன் ஆண்டவன். முருகனைப் போற்றுபவர் ஆத்ம சொரூபத்தின் இளமையைப் போற்றுபவராகின்றனர்.

ஒரு முறை 'முருகா' என்ற போதிலும் உயர்கதி வரும் எனும் உண்மையை அருணகிரியார் அருமையாக அவர்தம் திருப்புகழில் விளக்கிப்பாடியுள்ளார். கலியுகத்தில் கருணைத் தெய்வமாக அவன் விளங்குகிருன்.

## முருகனது சொரூப விளக்கம்

ஆறு முகமும், பன்னிரு கரமும், அழகிய வடிவேலுங்கொண்டு வள்ளி தேவசேனு சமேத ஸ்ரீ சுப்பிரமணிய ஸ்வாமியாக விளங்குவதே முருகனது உருவத்தோற்ற அமைப்பாம். உயர்ந்த தத்துவங்களை உருவகப் படுத்தி ஒவ்வொன்று ஒவ்வொரு தலையாகக் கருதப்படுகிறது. ஞானம், வைராக்கியம, வீரியம, ஐசுவரியம், ஸ்ரீ, கீர்த்தி, ஆக தெய்வ மஹிமைகள் ஆறும் சேர்ந்திருப்பவன் ஆறுமுகன், ஷட்குண சம்பன்னன். சிவத்துக்குரிய ஐநது முகத்தினையும் சக்திக்குரிய ஒரு முகத்தினையும் கொணடு ஆறுமுகனுயினன் எனவும், நான்கு திசைகளையும் மேல் கீழிடங்களையும் நோக்கி அனைத்தையும் பரிபாலனஞ் செய்ய இறைவன் அறுமுகனுயினன் எனவும் கூறப்படும். சிவனது ஞான நெற்றிக் கண்ணிலிருந்து

தோன்றிய பொறிகளே ஆறுமுகம் கொண்ட முருகனுக ஆயின என்பது கந்த புராண வரலாறு. அசுரர்களது கொடுமை தொலையவே அறுமுகன் அவதரித்தான் என்பர் திருமூலர். தீயின் ஒளி முருகன் என்னும் வித மாக விளக்குவர் பெரியோர். சுடர் படர் ஒளியே கந்தவேளாகும். பார்ப் பதற்குப் பாலன் போலத் தோன்றிஞ லும் முற்றும் உணர்ந்த சீலன் என்று ஷண்முக ப்ரபாவத்தை சிவ பெரு மானே உமையம்மையிடம் உரைப்ப தாக ஸகாந்தம் பாடுகிறது.

பிறதெய்வங்களுக்கு இல்லாதவகை யில் முருகன் ஆறு திருமுகங்கள் உடை யவனுக விளங்குகின்முன்; அஃது அவனது சிறப்பியல்பை உணர்த்து கிறைது. தன ஆறு திருமுகங்களால் அடியார்களின் அச்சங்களையும, கவலை களையும் போக்கி ஆறுதலை அளிககின் றுன் முருகன்.

'' அஞ்சு முகம் தோனறின் ஆறுமுகம் தோனறும ''

என்பது நக்கிரர் திருமுருகாற்றுப் படை.

'' அஞ்சுமுகம் தோன்றுமல ஆறுமுகம் காட்டவந்த
செஞ்சரணச சேவடியைச்-
சிந்தையைப்ப தெந்நாளோ ''

எனபர் தாயுமானவர்.

யாண்டும் நிறைந்திருப்பவன் ஷண் முகனுகிய முருகன் என்றும் பெரி யோர் கூறுவர்.

'' ஆறு சமயக் கடவுள் வேறு வேறன்றி
யான் ஒருவனே அங்கிங்கிருந்து
அன்பர்க்கும் முக்தி தருவித் தென்று
யாவர்க்கும் அறிவித்த வதனமணியே

என்பது சிதம்பர சுவாமிகளருளிய திருப்போரூர்ச் சந்நிதி முறை. பெருங் கவிஞரேறு மகா வித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சைவம், வைணவம், கௌமாரம், காணபத்யம், சாக்தேயம், சௌரம் என்றும் ஆறு சமயங்களுக்கும், மூலா தாரம், சுவாதிட்டானம், மணிபூரகம் அநுகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களுக்கும், வண்ணம், பதம், மந்திரம், புவனம், தத்துவம், கலை என்னும் ஆறு அத்துவாக்களுக் கும் முதல்வன் முருகனே என்பதனை அவனது ஆறு திருமுகங்களும் அறி விக்கின்றன எனப் பாடுகின்ருர்.

'' ஆட்டும் சமயம ஆறினுக்கும்
ஆதாரங்கள் ஆறினுக்கும
அத்துவா ஓ ஆறினுககும்
அமையும் தானே முதல் என்று
திட்டமபடி யாவரும் தெளியத்
தெளிநதாங் காறு முகம் திகழச்
செல்வம் மலிய இடைக்கழிவாழ்
சேயைப் பிரிந்து காக்கவே ''

—(திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழ்)

## ஆறுமுகங்கள்-பன்னிரு கரங்கள் செய்யும் தொழில்கள்:

அருணகிரி நாதரருளிய திருப்புகழ் ஆறுமுகத்தின் தொழில்களை அழகாகப் பேசுகிறது அடியிற் கணடவாறு;—

'' ஏறு மயிலேறி விளையாடு
முகமொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசு
முகமொன்றே
கூறுமடியார்கள் வினை தீர்த்த
முகமொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்ற
முகமொன்றே
மாறுபடு சூரரை வதைத்த
முகமொனறே
வள்ளியை மணம் புணர வந்த
முகமொனறே
ஆறுமுகமான பொருள் நீயருளல்
வேண்டும்
ஆதியருணசல மமர்ந்த பெருமாளே

ஆறுமுகத்திற்கு ஒப்ப அவனுககுப் பன்னிரு கைகள் அமைகின்றன ஒவ் வொரு கையிலும ஒரு தெய்வத்தின ஆயுதத்தை அவன் ஏந்தியுளளான். மனிதர்களின் மேலாம் வடிவமா யுள்ள முருக கடவுள் பன்னிரு கைகளை பெற்றிருப்பது மக்களுக்கு அவர்களின் ஆற்றலை ஞாபகப்படுத் தற் பொருட்டேயாம்.

## ஆறுபடை வீடு

படைக்கலன்களுடன் பண்டைக்காலத் தில் மாமன்னர்கள் தங்கியிருநத இடத்திற்கு படைவீடு என்று பெயர் உண்டு. முருகன் கோயில் கொண் டிருக்கிற படைவீடுகள் பிரார்த்தனைத் தலங்களாக விளங்குகின்றன.

தமிழகத்தில் முருகன் எழுந்தருளி யிருககின்ற கோயில்கள் ஏராளம். மனிதனைப் புனிதனுகச் செய்வது ஆலயம். அவர் வீற்றிருந்தருள்கின்ற திருத்தலங்கள் அறுபத்து நான்கினுள் முக்காலமும் உணர்ந்த நமது முன் னேர் இன்றைய சமுதாயத்தின் போகசை அன்றே ஊகித்து முருகன் வழிபாட்டுககு ஊறு நேர்ந்துவிடக் கூடாது என்ற நோக்கத்தோடு தத்து வத்தை ஒளித்து ஆறு முக்கிய இடங் களில் முருகனைத் தரிசிக்கும் வழியை வலியுறுத்தியிருக்கிருர்கள். முருகன் வீற்றிருத்தருளும் விசேடத் திருத் தலங்களான பரங்குன்று, செந்தூர், பழனி, ஸ்வாமி மலை, திருத்தணி, பழமுதிர்சோலை முதலானவை முருகப் பக்தர்களின் தவயோக நிலையைக் காட்டுவதாக அமைந்திருப்பதானது பொருத்தமானதே. இதற்கு அனு பூதிமானுன அருணகிரியும் தமது திரு வகுப்பில் ''ஆறு நிலையென்று முத லாகிய பரங்கிரியும்'' என அர்த்தம் தருகிருர். மேலும் அவர்தம் திருப் புகழில் ''அறுபது நிலை மேவிய தட மயில்தனி லேறிய பெருமானே'' என்று கூறுவதிலிருந்து ஆறுபடை வீடு குறித்துச் சிந்திக்கும் பக்தரை நேர்வழியில் கொண்டு செல்லும். முருகன் வழிபாட்டில் ஆறுபடைவீடு ஆறு யோக நிலைகளைத்தான் குறிக் கின்றன. குமரகுருபரர் ''ஆறு திருப் பதி கண்டு ஆறெழுத்தும் அன்பினு டன் கூறுமவர் சிந்தை குடிகொண் டோனே'' என்று முருகனைப் போற்று கிருர்.

# தஞ்சை சாலிக்கிராம ஸ்ரீ கோதண்டராமர் ஆலயம்

**திரு. பி. கலாநிதி, பாபநாசம்.**

தஞ்சை புன்னைநல்லூரில் பிரசித்திப்பெற்ற ஸ்ரீ மகா மாரியம்மன பின்னால் (அதாவது வெளி பிராகாரத்திற்கு) மேற்கில் ஸ்ரீசாலிக்கிராம ஸ்ரீ கோதண்டராமர் ஆலயம் உள்ளது. இநத ஆலயத்தில் கருங்கல் சிலா உருவம் ஸ்ரீ கோதணடராமர், ஸ்ரீ இலட்சுமணர், ஸ்ரீ சீதையுடன் கம்பீரமாக சிற்ப நுணுககங்களோடு காட்சியளிக்கிறது. தியான ஸ்லோக முறையோடு கூடிய உற்சவரும் உள்ளனர். ஆலயம் மிகப்பெரியது. சுமார் 700 ஆண்டுகளுக்கு முற்பட்டது. இந்த பகவானின் ஆலயத்தில் பக்தர்களின் பாதங்கள் நிச்சயம் படவேண்டும்; ஆலயத்தில் 5 கால பூசையும் நடைபெறுகிறது. தற்சமயம் ஆலயத்திற்குத் திருப்பணி கைங்கர்யம் செய்யவேண்டியிருக்கிறது. இதற்கு பொது மக்கள் ஒத்துழைப்பு இல்லாமல் எனன செய்ய முடியும்? பக்தர்கள் மனம் வைத்தால் நடக்காதது என்ன ?

இந்த ஆலயத்தின் சிறப்பு: சௌந்தர்ய விமானம்—புன்னை விருட்சம்—விருட்சத்தின் அடியில் ஸ்ரீ இராமர் பாதுகை, சாயா புஷ்கரணி, பெரிய ஆஞ்சநேயருக்குத் தனிச் சன்றிதி. துதிக்கை ஆழ்வாருக்கும் தனியே சநநிதியும் உண்டு

அரண்மனை தேவஸ்தானத்தால் நிர்வகிக்கப்பட்டு வரும் இந்த அரிய ஆலயத்தின் அருகே 75 வயதான ஸ்ரீ தவத்திரு சரஸ்வதி அம்மையாரின் ஸ்ரீ லலிதா ஆசிரமும் இருக்கிறது. ஸ்ரீ கோதண்டராமரின் ஆலயத்தில் கிடைக்கும் தீர்த்த துளசியோடு, லலிதா ஆசிரமத்தின் புனிதமான விபூதியும் கிடைக்கிறது.

பிறவிப்பயன் கடன் கடக்க திருவருட்செயலால் அடியேன் இந்த அளவில் ஸ்ரீ கோதண்டராமனை சேவிக்கிறேன்.



## செந்தின் மாமலை (திருச்செந்தூர்)

தேவர் படைத்தலைமை பொறுப்
பெடுத்து—தோள்கள்
தினவெடுத்துசூரன் உடல்கிழித்து—
கோவில
கொண்டே அமர்ந்த ஒரு வீடு—அது
கடல்கொஞ்சும் செந்தூரிலுள்ள
படைவீடு

சிக்கலில் வேல் வாங்கித் திருச்செந்தூரில் சூர சம்மாரம் என்பது பழமொழி. வேல்நெடுங்கண்ணியாகிய அம்பிகையிடம் சக்திவேல் பெற்று முருகன், சூரபதுமனை அடக்கி வெற்றி கொள்ள திருச்சொந்தூருக்குப் புறப்பட்டதாக வரலாறு. அலைகடல் ஓரம் அருள்மொழி கூறும். அணனல் செந்தூரன் தரிசனம் செய்ய ஆனந்தம். நாழிக் கிணற்றில் ஸ்நானஞ் செய்ய நாடாதுவினை; கடலாடிக் கரையேறிக் கந்தனைக் காண, கவலையெனும் கடலில் வீழாது காப்பான் கந்தன்.

"திரளுமணி தரளமுயர் தெங்கில் தங்கிப் புரள ஏறி திரை மகர சங்கத் துங்கத்தி பிரஜல நிதிதழவு செந்தில்" என்ற திருப்புகழிலிருந்து இதன் பெருமை விளங்கும். அறுபடைவீடுகளுள் 2-வதாகக் குறிப்பிடப்படுவது. இதனைக் கயிலை மலையனைய செந்தில் என்பர். அரும்பெரும் ஆறுமுக ஸ்தலம் திருச்செந்தூர்.

அலைவாயாகிய திருச்செந்தூர் கடற்கரையிலுள்ள ஒரு திவ்ய ஸ்தலம். என்னிடம் வருபவர்கள் ஸம்ஸாரக் கடலைத் தாணடி விடுவார்கள் என்று உலகுக்கு அறிவிக்கும் முகமாகவே ஆண்டவன் கடற்கரையில் கோயில் கொண்டுள்ளான் எனவும், அலைகள் யாவும் எப்படி கரையிலடங்கி விடுகின்றனவோ அவ்வாறே அலைவாய் அழகனின் அடிபணிந்தவரின் ஆபத்துக்கள் அடங்கிப் போகும் என்று ஆதி சங்கரர் சுப்பிரமண்ய புஜங்கம் போற்றுகிறது.

பாண்டிய நாட்டிலுள்ள திருநெல்வேலி மாவட்டத்தில் தாமிரவன்னி நதிக்குத் தென்திசையிலே, ஜெயந்தி மாநகரம், திருச்சீரலைவாய் என வரும் பெயர்களுடைய திருச்செந்தூர் என்னும் இச்சுப்ரமண்யத் தலமானது படைவீட்டுத் தலம் ஆறினுள் ரொம்ப ரொம்ப விசேஷமுடையது.

அலையலையாகத் துயரங்கள் நம்மை அணுகும்போது அலைவாய் ஸ்வாமி செநதிலம்பதி ஓடோடி வந்துக் காப்பான என்று குமர குருபரர் குறிப்பிடுகிறார். பகழிக் கூத்தர் இவ்வூரிலேயே திருசசெந்தூர் பிள்ளைத் தமிழ் இயற்றினார்.

ஐந்தெழுததே ஆறெழுத்தாகமாறிய சரவணபவனை உள்ளன்புடன் ஓதுவார் சிந்தையில் செந்தில் குமரன் குடிகொள்வான். நாற்றிசையிலும் நாதன் புகழைப் பரப்பி வரும் நாளில் திருச்செந்தூர்க் கருகில் அருணகிரி நாதரோடு அவரது சமகாலப் புலவரான வில்லிப் புத்தூரார் வாது செய்ய வந்தார். இவ்வாது திருச்செந்தூரிலேயே நடைபெற்றதென் பார்.

(தொடரும்)




# கீதை காட்டும் நல்வழி

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

## அத்தியாயம்–10

## விபூதி யோகம்: பகுதி – 12

**த**வறு செய்பவர்களைத் தண்டிப்பது அரசனின் கடமையாகிறது. எவர்கள் எது செய்தாலும் தண்டனையே கிடையாது என்ற ஒருநிலை உருவானால் சமுதாயம் நிலை குலைந்து விடும். இயற்கை நியதிகளுக்கு உட்பட்டு நாம் வாழ்ந்தால் நல்லாரோக்கியம் நம்மிடம் நிலவும். மாறாக நெறி பிறழ்ந்த வாழ்க்கை வாழ்வோமேயாகில் நாம் பல நோய்களுக்கு உட்படுகிறோம். நோய் என்பது நெறி பிறழ்ந்த நமக்கு இயற்கை அன்னை தரும் தண்டனையேயன்றி வேறில்லை. சட்ட திட்டங்கள் சரியாக அமுல் செய்யப்படும் நாட்டில், பல்வேறு குற்றங்களுக்கு பாரபட்சமின்றி உரியதண்டனை அளிக்கப்படும் நாட்டில், மக்கள் நியாயம் நேர்மைக்கு உட்பட்டு நடப்பர். தண்டனையை மிகைப்படுத்தாமலும், குறைக்காமலும் வழங்குவது அரசனின் கடமையாகிறது.

திருட்டுக் குற்றத்துக்குக் கையையே வெட்டி விடும் வழக்கம் நம் நாட்டில் அன்றைய நாட்களில் அமுலில் இருந்ததாகச் சரித்திரம் கூறுகிறது. நெறி பிறழாத நேர்மையான ஆட்சிக்குப் பொற்கைப் பாண்டியனின் சரித்திரம் நல்லதொரு எடுத்துக் காட்டு. இன்றும் கூட சில ஆப்பிரிக்க நாடுகளில் இத்தகைய கடும் தண்டனைகள் அமுலில் இருக்கின்றனவாம். மனிதர்களிடம் சுயக் கட்டுப்பாடு ஏற்படாத வரை சட்ட திட்டங்களும் தண்டனைகளும் தேவைப்படுகின்றன. இது குறித்து பகவான் கூறுகிறார்.

தண்டோ தமயதாமஸ்மி
நீதிரஸ்மி ஜிகீஷதாம்|
மௌனம் சைவாஸ்மி குஹ்யானாம்
ஞானம் ஞானவதாமஹம் ||38||

'தண்டிப்பவர்கள் பால் நான் செங்கோல். வெற்றி வேண்டுபவரிடத்து நான் நீதி. ரகசியங்களுள் நான் மௌனம். ஞானிகளது ஞானமும் நானே'

முறையான தண்டனைக்கு அறிகுறியாக செங்கோல் விளங்குகிறது. குற்றம் செய்தவர் அன்றைய அரசனது மகனேயாயினும் அல்லது இன்றைய ஆட்சியாளர்களின் புதல்வர்கள் மற்றும் உறவினர்களேயாயினும் உரிய தண்டனை கொடுக்கப்படவேண்டும் என்பதற்கு செங்கோல் எடுத்துக்காட்டாக அமைகிறது. ஒருவன் குற்றம் ஒன்று செய்து விட்டான். அந்தக் குற்றத்துக்கு ஏற்ற தண்டனை விதிக்கப் படும்பொழுது குற்றவாளி எவர்மீதும் குறைகூறாது தண்டனை ஏற்றுக்கொள்கிறான். அவ்விதம் அவனுக்கு அளிக்கப்படும் தண்டனையே அவனைச் சீர்திருத்தம் செய்வதாக அமைகிறது. சாதாரண மக்களுக்கிடையில் தண்டனை பெரிய சீர்திருத்தம் செய்கிறபடியால் அதுவும் இறையம்சம் வாய்ந்ததாகிறது. அதிகத் தீனி மற்றும் தகாத உணவை உண்பதால் அஜீரணம் மற்றும் வயிற்று வலி உண்டாகிறது. உடனே அதைப் போக்க வேண்டி டாக்டர் நம்மை ஒன்றிரண்டு நாட்கள் உபவாசம் இருக்கும்படிக் கேட்டுக் கொள்கிறார். அந்த 'உபவாசம்' எதைக் குறிக்கிறது? ஆரோக்கிய நியதியை மீறியதற்காக நமக்கு அவர் தரும் தண்டனையாகும். இயற்கை விளைவிக்கும் பல நோய்களை தவறுதலான வாழ்க்கைக்காக நாம் பெறும் தண்டனை என்றே நாம் பொருள் கொள்ள வேண்டும்.

அரசனுகட்டும், மற்ற மக்களாகட்டும், தங்களது செயல்களில் வெற்றியை விரும்புதல் இயல்பேயாகும். நேர்மையான வழியில் எடுத்துக் கொள்ளும் முயற்சி நீதி எனப்படுகிறது. குறியும் நெறியும் அதாவது இலட்சியமும் மார்க்கமும் இரண்டும் நேர்மையான முறையில் அமைதல் வேண்டும். அரசனைப் பொறுத்தமட்டில் சாம, தான, பேத, தண்டம் ஆகிய நான்கும்

நீதிக்குட்பட்டவையாகும். தகாத முறையில் வெற்றி பெற்றாலும் அந்த வெற்றி நில்லாது நீங்கி விடும். நாம் கடைப்பிடிக்கும் வழி முறைகள் நேர்மையானதாக இருக்குமாகில அதிலிருந்து பெறும் வெற்றியும் நிலைத்திருக்கும். இதை முன்னிட்டே நமது நாட்டில் முன்னர் நடந்த யுத்தங்கள் தர்ம யுத்தங்கள் எனப்பட்டன. சூரியன் அஸ்தமித்த பின்னர் போர் செய்யாதிருத்தல், நிராயுதபாணியான எதிரியுடன் சண்டை செய்யாதிருத்தல் (ஆயுதமிழந்து நின்ற ராவணனிடம் 'இன்று போய் நாளை வா' என்று ஸ்ரீராமபிரான் கூறியதை நாம் ஈண்டு நினைவு கூறுதல் வேணடும்) எதிரி எந்த நிலையிலிருக்கிறானோ அதே நிலையில் தானும் அவனுடன சணடை செய்தல் போன்ற நல்ல பல நெறி முறைகளுக்கு உட்பட்ட பண்டைய நமது தர்ம யுத்தம் எங்கே? ஒன்றுமறியா அப்பாவி மக்களின் தலையிலே குண்டு போட்டுக் கொல்லும இன்றைய 'நாகரீக' நாடுகளின் அதாம யுத்தம் எங்கே?

எல்லோரிடமும் எல்லாவற்றையும் நாம் கூறக்கூடாது. இன்னாரிடத்தில் இதைத்தான் கூறலாம் என்பதை அறிந்து வார்த்தைகளை அளந்து பேசக்கற்றுக்கொள்ளவேண்டும். சுருங்கப் பேசுதல், குறைவாகப் பேசுதல, பண்புடன் பேசுதல், இனிமையாகப் பேசுதல், அடக்கமாகப் பேசுதல், அன்பாகப் பேசுதல் எனப் பேசுதல் பலவகைப்படும். இவை யெல்லாவற்றையும் விடச் சிறந்தது பேசாதிருந்தும் பழகுவதேயாகும். பிறரிடத்தில் கூறப்படாதது ரகசியம் எனப்படுகிறது. நாம் வாய் பேசாதிருக்கும் போது எந்தக் கருத்தையும வெளியிட வாய்ப்பில்லாது போகிறது. அந்த நிலையில் நாம் மௌனத்தைக கடைப் பிடிக்கிறோம். எனவே மௌனம ரகசியத்தை நன்கு பாதுகாக்கிறது.

மௌனத்தில் அமைதி நிலவுகிறது. எந்தவித சப்தமும ஆங்கில்லை. எங்கே அசைவு உள்ளதோ அங்கே சப்தம் எழுகிறது. அலையற்ற நீரில் அமைதி நிலவுகிறது. அலை வீசும் கடல் 'ஓ' என்று ஓசை எழுப்புகிறது. மரங்கள் அசைந்து ஆடும்போது 'ஊய்' 'ஊய்' என்று பெருத்த சப்தம் நாற்புறமும் கிளம்புகிறது. இயற்கை முழுவதும் ஓயாது அசைந்து கொண்டிருககிறது. எனவே இயற்கையில் எங்கும் சப்தம் நிலவுகிறது. அங்கே மௌனம் இருக்க வழியில்லை. அடங்காத மனம் நம்முள்ளே பேரிரைச்சலை எழுப்புகிறது. மனம் அடங்க அடங்க நம்முள் அமைதி ஓங்குகிறது. அடங்கிய மனம் அமைதியின் உறைவிடம். முற்றிலும் மனம் ஒடுங்கிவிடின் அப்பொழுது ஆத்ம சொரூபம் மட்டுமே எஞ்சி நிற்கிறது. ஆத்மா அசைவற்றது. அதில் சப்தமில்லை. எனவே அது மோன சொரூபமாகும். அந்த நிலையில நாம பேரமைதியையும் பேரானந்தத்தையும் அனுபவிக்கிறோம். மௌனவடிவமான ஆதமாவை நாம் வார்த்தைகளால் இன்னதென்று விளக்கிக் கூற முடியாது. ஆத்மானந்தத்தை நாம் அனுபவித்து உணரத் தான் முடியுமே தவிர வார்த்தைகளால் விவரித்துரைக்க இயலாது. ஊமையன் ஒருவன் அறுசுவை உண்டியை உண்டு அனுபவிக்கும் ஆனந்தத்தை எடுத்துக் காட்டிற்காக ஓரளவு அதனுடன் ஒப்பிடலாம். எனவே தான் ''மௌன வாக்ய ப்ரகடித பரபிரம்ம தத்வம்'' —'மௌனத்தால் விளக்கப்பட்ட பிரம்ம தத்துவம்' என்று நமது மறை நூல்கள் கூறுகின்றன.

**चित्रं वटतरोर्मूले वृद्धा. शिष्या गुरुर्युवा ।**
**गुरोस्तु मौनं व्याख्यानं शिष्यास्तु छिन्नसंशया: ।।**

'குரோஸ்து மௌன வ்யாக்யானம்' என்ற இநத தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திர வாககியத்தில் குருவானவர் சிஷ்யர்களுக்கு பரப்ரமம தத்துவத்தை மௌனத்தின் மூலம் புகட்டினார் என்று நாம் காண்கிறோம். எனவே தான் ரகசியங்களுள் முடிவானது மௌனம் அல்லது ஆத்ம சொரூபம் எனக் கண்ணன் கூறுகிறார்.

இயற்கை அல்லது பிரபஞ்சத்தை முப்பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை முறையே அறிபவன், அறிவு, அறியப்படுபொருள் ஆகும். இவற்றை வடமொழியில் ஞானி, ஞானம், ஞேயம் என்பர். இம்மூன்றும் ஒன்றாகின்ற இடத்து அதுவே பரம்பொருளாம். இவற்றில் முதல் இரண்டையும் ஒன்றாக்குவதைப் பற்றி பகவான் ஈண்டு பகர்கிறார். அறிஞன் வேறு, அறிவு வேறு அல்ல. தீயில் வெப்பம் பிரிக்க முடியாது நிலவுவது போன்று, அறிவும் அறிஞரிடத்து இணைந்தே இருக்கிறது. இறைவனே ஜீவர்களிடத்து ஞான சொரூபமாயிருக்கிறார். எங்கெல்லாம் அறிவு ஒளிர்கிறதோ அங்கெல்லாம் இறைத்தன்மை மிளிர்கிறது.

இவ்வாறு மேற்காணும் பல சுலோகங்களில் பகவான் தமது விபூதிகளைப் பற்றி விரிவாகத் தொகுத்து உரைத்து விட்டுக் கடைசியில் அர்ஜுனனைப் பார்த்து, ''அர்ஜுனா! எல்லா உயிர்களுக்கும் ஆதாரம் எதுவோ, அதுவே நான். என்னையன்றி அஃறிணை, உயர்திணை ஆகியவற்றில் வேறு எதுவும் இல்லை'' என்று கூறுகிறார்.

இப்படிச் சொன்னதும் அர்ஜுனனது மனத்தினில் அப்படியாயின் பகவானது விபூதிகள் இவ்வளவுதானா? இன்னும் உண்டா? என்றதொரு சந்தேகம் தோன்றியிருக்கக் கூடும். அதைப்போக்கும் விதத்தில் பகவான், ''அர்ஜுனா! என் திவ்விய விபூதிகளுக்கு முடிவே கிடையாது. எனது விரிவான விபூதிகளில் ஒரு சிறிது இங்கே எடுத்துக் கூறப்பட்டது. மகிமையும் அழகும் வலிவும் உடையன எவை எவையோ அவையெல்லாம் என் தேஜஸில் ஒரு பகுதியிலிருந்து உண்டானது என்று அறிந்து கொள்வாயாக'' என்று கூறுகிறார்.

இயற்கையைப் பற்றியே அரைகுறையாகத் தெரிந்து வைத்திருக்கும் மனிதனால் இறைவனைப் பற்றி பூரணமாகத் தெரிந்து கொள்ள முடியாது நீரின் அமைப்பு எத்தகையது என்பதை அறிந்து கொள்ள விழையும் விஞ்ஞானி ஒருவன் உலகில் பல பாகங்களுக்கும சென்று பல்வகை நீரையெல்லாம் சேர்த்து ஆராய்வதில்லை. மாறாக அவன் ஓரிடத்திலுள்ள நீரின் குறிப்பிட்டதொரு சிறு பகுதியை மட்டும் ரசாயன முறையால் பகுத்து அறிகிறான். ஹைட்ரஜன், ஆக்ஸிஜன் ஆகிய வாயுக்கள் 2:1 என்ற விகிதத்தில் இணைந்து நீராகிறது என்பதை அவன் கணடறிகிறான். பின்னர் உலகில் உள்ள அனைத்து நீரினுடையவும் அடிப்

படை அமைப்பு அதுவே என உறுதி கூறுகிறான். நீருக்குக் கூறப்பட்டதே ஏனைய பொருள்களுக்கும் பொருந்தும். ஜடப்பொருளைப் பற்றிய உண்மையே இதுவாக இருக்குமாகில், பரம் பொருளைப் பற்றிய உண்மையைப் பற்றிக் கேட்கவா வேண்டும்?

பகுத்து அறிவது மேலா அல்லது தொகுத்து அறிவது மேலா என்ற கேள்வி நம்மில் எழக்கூடும். அதற்குப் பகவான் விடை தருவது:

அதவா பஹுனைதேன
கிம் ஞாதேன தவார்ஜுன|
விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்னம்
ஏகாம்சேன ஸ்திதோ ஜகத் ||42||

'அர்ஜுனா! இதைப் பலவிதமாகப் பகுத்து அறிவதால் உனக்கு ஆவதென்ன? எனது ஓர் அம்சத்தால் நான் அகில உலகத்தையும் தாங்கியிருக்கிறேன்'

விளக்கத்துக்கு அப்பாற்பட்ட தொன்றை, சர்வ வல்லமை படைத்த தொன்றை எவ்வளவுதான் உதாரணங்களுடன் விளக்கிக் கூறினாலும் அதை வார்த்தைகளால் பூரணமாக விளக்கவே முடியாது. பகவான் பல்வேறு வடிவங்கள் வாயிலாகத் தமது மகிமையை விளக்குகிறார் எனினும், அவ்விளக்கங்கள் யாவும் அரைகுறையானதேயாகும். அலையாகத் தெரிவது சமுத்திரத்தின் மிகச் சிறிய ஒரு பகுதியே போல, அகிலாண்டமாக, அதாவது, சூரியன், சந்திரன், கிரகங்கள், நட்சத்திரக் கூட்டங்கள், பால்வெளிகள் இவையெல்லாமாகப் பரிணமித்திருப்பது இறைவனுடைய ஒரு சிறு அம்சம் மட்டுமேயாகும். இவற்றைப் பகுத்து அறிவதில் நமது காலத்தை வீணாக்குவதைக் காட்டிலும், இவற்றையெல்லாம் தொகுத்து உருவாக்கிய பரம்பொருளைப்பற்றிய உண்மைத் தத்துவத்தை அறிந்து கொள்ளுவதே சாலச்சிறந்தது ஆகும். இறைவனது மகிமையின் பெரும்பகுதி தோற்றத்துக்கு அப்பால் பரம் பொருளாக உள்ளது. உருவாய், அருவாய், உருவருவாய் உள்ளவர் பரம்பொருள். அவர் எத்தகையவர் என்பதைப்பற்றி அவரே தான் அறிவார். எனவே 'எல்லாம் இறைவன் மயம்' என்ற எண்ணத்தில் நிலைத்து அனைத்தையும் இறை சொரூபமாகக் காண்பதுவே அறிவுடைமையாகும்.

(தொடரும்)

# வேங்கடவன் ஒருபா ஒருபஃது


திரு. வித்துவான். கே. ஏ. மார்க்கபந்து,

காஞ்சிபுரம்


பூமக ளவளொடு புவிமக ளனுதினம் போற்றிடு வேங்கடவன்
தேமரு மலரொடு திகழ்தரு வேங்கடந் திருமலை தனையென்றும
காமுறு மிமயவர் கருதிய பொழுதவர் கவலை யெலாமேக
வாமன னெனவரு வானவர் கோனினி வந்தெமை யாட்கொள்வான்

கோணுறு வடிவொடு குறைகட லுலகினில் குலவிடு வேங்கடவன்
சேணுறு மிமயவர் குறை யிறந் தலனிரு திருவடி நாடினராப்
காணுறு பொழுதினில் கடிதவர்க் கருள்புரி காரணனு யந்நாள்
தூணுறு நரஅரி யாய்வரு தூயவன் துணையிருந் தாட் கொள்வான்

தானவ ரழிபட வானவர் வழிபட தாரணி வந்தன்றோர்
கூனுறு கொடியவன் குல முறை பிறழ்ந்திட கூறிய வஞ்சனை யால்
கானுறு வால்வினைக் கனிவுட னேபெறு காவலன் வேங்கடவன்
ஊனுடை யுடலொடு முழலுமிப் பிறவியை யொழிதர ஆட்கொள்வான்

இராவண னென வரு ராக்கதனுலருதுயருறு வான்வர்கள்
அராவணை துயில கொளும் பாற்கடலுற்றவனடிதொழு தனருய்ய
மராமரந் துளைசெய வாளி கடாவிய மாமலை வேங்கடவன்
தராதல மிசைதன தடியவர் வினைகெட தானிருந் தாட்கொள்வான்

வீடன னெனுமொரு மேலவன் சரணென மேவிய செயல் கண்டு
ஏடவிழ் மலரவள் ஏங்குறு நிலையினு மிடரவற் கிலையென்றே
நீடிய வடைக்கலம் நேர்பட வருளிய நீள்மலை வேங்கடவன்
நாடிய வடியவர் நாநிலத் துய்வுற நாடொறு மாட்கொள்வான்

ஆயர்கள் திருவெனு மாநிரை காத்தவ ரடிதொழுமாயவனாய்
மேய நல் லுரலொடு மேவிய நாளிரு மருதிடை யூர்ந்தேகித்
தீயவல் லரக்கரைச் செகுத்தருள் புரிந்த எந்திருமலை வேங்கடவன்
தூய நற்றமிழ்கொடு துதி செயு மடியவர் துயர் துடைத் தாட்கொள்வான்

பாண்டவர்க் கருள்புரி பாகனாய் வந்தவர் பாரதப் போரிடையே
தூண்டிடு துரகத் தேரினைக் கடவிய தூதுவ னயந்நாள்
ஈண்டிய பகைவர்கள் சேனைகளழிபட வெழுந் தருள் வேங்கடவன்
வேண்டிடு மடியவர் வெவ்வினை களைந்திடு வேட்கையினாட்கொள்வான்

தேனுக னெனவரு தீயவனழிபட செருவிளை சேவகனாய்
மானுட வடிவொடு மாநில மேவிய மாமலை வேங்கடவன்
தேனினு மினிய நம் தீந்தமிழ் கொடுதுதி சேர்த்திரு மடியார்கள்
வானினு முயரிய வாழ்வினை யவாபெற மாநிலத் தாட்கொள்வான்

மாமறை புகழதரு மாதவ வடிவுடை மறைவல அந்தணனாய்
ஏமமொ டுலகினில ஏற்றநற் புண்ணிய மீந்திடு வோன் முன்னர்
தூமறை தொழுதிடு தூயனாய் மகிழமுன் தோன்றிய வேங்கடவன்
நாமம துரைசெயும் நாநிலத் தவருய நாடியே யாட்கொள்வான்

நாளொரு பொழுதினும் நாடியே மணமுறு நாள்மலர் கொடுதூவி
தாளுறு மடியவர் தாமுய வனுதினம் தாங்கிடு வேங்கடவன்
கோ ளொடு வருபல கோடிய வினையெலாம் குலைந்திடவே செய்து
மீளவும் வருமொரு மேவிய பிறவிநோய் வீழ்த்தியே யாட்கொள்வான்.



# ஆண்டுகொள்ளே!



மாருதிதாசன்,
காஞ்சிபுரம்.



வேண்டுவார் வேண்டுவன நல்குவான் வெம்பிறவி
தாண்டுவார் தாண்டப் புணையாவான்—தூண்டுவார்
உள்ளத் துணையாவான் ஓங்குபுகழ் வேங்கடவன்
உள்ளுவார் உள்ளிருப்பான் காண் !

திருவளரும் மாமலையாம் திருவேங்கடம் காணத் தேவ தேவா !
உருவளரும் ஏழுமலை மீதேறி உனைக்காண ஓடி வந்தேன் !
கருவளரும் வெவ்வினையைக் கடிந்தென்னைக் காத்தல்நின் கடனே யன்றோ!
மருவளரும் மலையானே ! மனமிரங்கி அடியேன் ஆண்டு கொள்ளே

பொய்யும் புனைசுருட்டும் பொல்லாத வஞ்சகமும் போலி வாழ்வும்!
உய்யும வகையென்று உலகோர்கள் வாழ்ந்திடுவர் உனைம றந்து
செய்யும் அவர் பிழையை நினைந்துள்ளம் இரவு பகல் நடுங்குதையா !
பெய்யும் பனி மலைசூழ் வேங்கடவா ! பேதையெனை ஆண்டுகொள்ளே!

தேவரும இருடியரும் கந்தாவர் முதலான வானோர் யாரும்
மேவரும் நின்கோயில வாசற்கண் மொய்த்திடுவார் அவரை முந்தப்
பாவரும் சொல்லாலே 'கோவிந்தா' என்றுன்னைப் பாரோர் ஏத்த
பூவரும் மலையானே! பொய்யேனும் வந்தடைந்தேன் ஆண்டு கொள்ளே!

ஏழுசுரம் ஏழுநிறம் எழுமாதர் எழுகடல்கள் ஏழு ரிஷிகள்
ஏழுமே கங்களென ஏழினையே எல்லோரும ஏற்றிச் சொல்வர்
ஏழுவென வருபிறவி அறுவதறகே வழியென்று எழில்மே கம்சூழ்
ஏழுமா மலையானே! உனையடைந்தேன் ஏழையெனை ஆண்டு கொளளே!

மேருவோ வெனவியந்து நின்கோயில் பொன்வாயில் மதிலைச் சுற்றிச்
சாருவோர் தேவரெனக் 'கோவிநதா' 'கோவிந்தா' என்று மண்ணோர்
ஊருவார் அவர்பின்னே யானூரந்து எனையாளென் றேங்கும் அன்பால்
கோருவேன் பொற்கோயில் வாழ்வோனே! கொடியேனை ஆண்டு கொள்ளே!

குணமொன்று மறியாத கொடியவரைப் பலகாலும் சுற்றிச் சுற்றிப்
பணததிற்கும பதவிக்கும் பலலிளித்து யானலைந்த கால்க ளோடும்
மணமலர் சூழ் வேங்கடவா! மனமிசைந்துன் அருள்பெறவே ஓடிவந்தேன்
அணஙகு பலா நடம் பயிலும் அணிமலையாய் அசடனெனை ஆண்டு கொள்ளே!

நிங்கோயில் சர்க்கரைப் பொங்கலினும் லட்டினும் மிகஇ னிக்கும்
உன் வாயில பொன் சிரிப்பு உவட்டாது உலவாது என்று கண்டே
என் வாயில வந்தவெலாம் கூறியுன தருள்பெறவே ஏத்து கினறேன்
பொன் வாயில் கோவிந்தா கோவிந்தா புலையன்எனை ஆண்டு கொள்ளே !

எணணுவாா தமக்கெளியாய் எழிற்சோதிப் பெருமானே இலங்கும்நெற்றிக
கண்ணதனில கஸ்தூரித் திலகமொடும் கவின்மிகுகுண் டலஙகளோடும்
நண்ணுவார் தமைக்கவரும் சர்வாப ரணங்களொடும் பொலியக் கண்டு
உணணலாம் கண்ணார யெனவந்தேன் உளங்கொண்டு ஆண்டு கொள்ளே!

ஓய்வின்றிக் கோவிந்தா கோவிந்தா என்றடியார் கூவக் கேட்டும்
பாய மந்தி பேன் பாாக்கும் மலையானே பாவியேன் பற்றொன் றின்றிச்
சாய்கில்லேன் உன்பக்கல் சாருதற்கே சற்புத்தி அருளல் வேண்டும
தாயெனறு நமபிவந்து தற்போதம் இழந்தவெனை ஆண்டு கொள்ளே!

சீர்கொண்ட வேங்கடவா வைரமுடித் திருச்செல்வா திருவே வாழும்
ஏாகொண்ட மணிமார்பா கண்கவரும் எழிலணிகள் புனைந்து தோன்றும்
பேர்கொண்ட கோவிந்தா பெருமானே பொலியும்கழற் பாதா எனனை
நோகொண்ட பார்வையினால கனவினிலும் பார்த்தாலும்
கடைத்தேர் வேனே!

## போற்றி

• பூவலரும் மாமலைமேல் பொலிந்து தோன்றும் புண்ணியனே போற்றி!
போற்றி!
பாவலரும் திருநாவால் பண்ணிசைக்கும் ஆழ்வார்கள் பண்சுவைப்பாய்
போற்றி போற்றி!
நாவலரும பாஞ்ச சன்ய சுதர்சன நளினமலர்ப் பாத போற்றி!
காவலரும் வேங்கடவ கலியுக வரத எம்மைக் காப்பாய் போற்றி!

# திருக்கரம்பனூர் உத்தமன்

டாக்டர். G. T. கோபாலகிருஷ்ணநாயுடு,

திருசிரபுரம் :

திருக்கரம்பனூர் உத்தமனை அணுக, தமிழ் நாட்டிற்குச் சென்ற பொழுது, திருச்சிராப்பள்ளி அடைந்தேன். திருசிரபுரம் மலையைக் கண்ணுற்றேன். மலையை இருப்பிடமாக உடைய, நம் பெருமானைத் துதிக்கவே, என் மனம் இன்பம் நிறைந்து குளிர்ச்சியடைந்தது. அந்த இன்பத்தையும் வாசகர்களுக்கு அள்ளிக் கொடுக்க, இச்சையுடன் பகர, திருஞான சம்பந்தர் அருளிய செய்யுளைச் சமர்ப்பிக்கின்றேன்.

''நன்றுடையானைத் தீயதிலானை நரை வெள்ளே(று)
ஒன்றுடையானை உமையொரு பாகம் உடையானைச்
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூற என் உள்ளங் குளிரும்மே''

நல்லனவற்றையே, கல்யாண குணங்களையே உடையவன்; தீய குணம் ஒன்றும் இல்லாதவன்; மிக வெள்ளிய ஓர் இடபாகத்தை உடையவன்; உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகத்தை உடையவன்; சீரிய குணங்களையுடையவன்; என்றும் பிரியாத நிலைவுற்ற செல்வமுடையவன். இப்பெருமான் தீமை கலவாத முழு நன்மையுடையவன். அறவடிவும் அருள் வடிவும் கொண்டோன். வெள்ளேறாகிய அறவடிவும், உமையாகிய அருள் வடிவும் தன் பாகத்தில் அடைந்த எம்பிரானைத் தொழுது நின்ற பொழுது, அருகில் அமைந்த திருக்கரம்பனூர் உத்தமனிடம் செல்ல என் மனம் துடித்தது.

திருக்கரம்பனூர் :

இப்பெம்மான் திருச்சினப்பள்ளிக்கு அருகில், மூன்று கல் தொலைவில், உத்தமர் கோயில் என்ற தலத்தில், கொள்ளிடம் ஆற்றின் இடது கரையில் உள்ளவர். இவருக்குப் புருஷோத்தமன் என்றும் திருக்கரம்பனூர் உத்தமன் என்றும் பெயர்கள் உண்டு. மூலவர் பெயர் புருஷோத்தமன்: தாயார் பூரணவல்லி. இத் திருக்கோயிலில் பிரம்மாவுக்கும் சிவபெருமானுக்கும் இடம் உண்டு. சிவபெருமானாகிய பிக்ஷாடனர் அம்மன் சௌந்திரப் பார்வதியுடன் இருப்பது கண்கொள்ளாக் காட்சி. மூவரும் கொண்ட இத்தலம் பெயரும் சிறப்பும் உடையது. நம்மாழ்வார் இம் மூவரையும் ஒருங்கே பாடியுள்ளதைக் கண்டு களிப்போம்.

''யானும் தானா யொழிந்தானை
யாதும் யாவர்க்கும் முன்னோனை,
தானும் சிவனும் பிரமனு
மாகிப் பணைத்த தனி முதலைத்
தேனும், பாலும் கன்னலும்
அமுது ஆகித் தித்தித்து, என்
ஊனில் உயிரில் உணர்வினில்
நின்ற ஒன்றை, உணர்ந்தேனே''
திருவாய்மொழி—(8-8-4)

'எனக்கு ஆத்மாவாக ஆனவன்; எல்லாவற்றிற்கும் மூலகாரணன்; தானான விஷ்ணுவும், சிவாந்தர்யாமியும், பிரம்மாந்தர்யாமியும் ஆனவன். ஆரோக்கியம், புஷ்டி, ஸத்துவகுணம், அழியாமை எல்லாம் அருளினவன், மனம், மொழி, மெய் இவைகளில் ஆதாராமாயுள்ளவனாகிய பரமாத்மாவுடன் நான் என்னான்றும் சம்பந்தப் பட்டவன். அவனுக்குத் தேனும் பாலும் போல் இவ்வாத்மா போக்யமென்று உணர்ந்து கொண்டேன்' என நம்மாழ்வார் நமக்குரைக்கிறார்.

''உணர்வின் வடிவினனாகிய பெருமான் சராசரங்கள் யாவற்றிற்கும் முதல்வன்; ஹரி, ஹரன், பிரமனுமாகி ஒரே மூர்த்தியாகப் பெருமைகொண்ட ஒப்பற்ற பெருமான்; தேனும், பாலும், கரும்பும் அமிர்தமுமாக அனுபவிக்கப்படுபவன். அப்பெருமான் என் உடலிலும் உயிரிலும் பொருந்தியிருப்பதை நான் உணர்ந்தேன்.'

'அகங்காரம் நீங்க எம்பெருமான் என்னுள் உடல், உயிர், உணர்வு முழுவதும் அமிர்தமாகத் தித்தித்துப் பரந்து நின்றான். அவனை நான் உணர்ந்தேன்' என்று ஆழ்வார் பெருமானார் கூறுகிறார். எல்லாம் எம்பெருமான் என்ற உணர்வு ஒருவன் பெறும் பொழுது அவன் வர்ணிக்க முடியாத ஓர் பரந்த இன்பம் பெறுகிறான். அதை நம் ஆழ்வார் பெருமானார் நமக்கு உணர்த்திக் காட்டுகிறார்.

இத்தலத்தில் மூலவர் புருஷோத்தமன் கிடந்த திருக்கோலத்திலும், உற்சவர் நின்ற திருக்கோலத்திலும், காட்சி அளிக்கின்றனர். இங்கு பிரமன், திருமால், பிக்ஷாடனர் திரிமூர்த்திகளாக ஒருங்கே அமையப் பெறுகின்றனர்.

திருமாலுக்குரிய இத்தலத்து இறைவனை திருக்கரம்பனூர் உத்தமன் என வழங்குவர். திருமங்கை ஆழ்வாரால் பாடப் பெற்றவர்.

ஸ்ரீரங்கநாதர் மாசி திருப்பள்ளியோடம் 5-ம் திருநாள் அன்று இவ் ஆலயத்தில் உபயம் கண்டருளி, அருகே உள்ள கதம்ப புஷ்கரணியில் தீர்த்தம் சாதிக்கின்றனர். திருமங்கை ஆழ்வாரும் இந்த க்ஷேத்திரத்தில் வாசஞ் செய்து கொண்டு ஸ்ரீரங்நாதருக்கு விமானம், கோபுரம், பிரகாரங்கள் முதலிய திருப்பணிகள் செய்தார். கதம்ப புஷ்கரணிக்கு வட பாகத்தில் நன்செய் நிலமும், அதையடுத்த தோப்பும், மண்டபமும் ஆழ்வார் தங்கியிருந்ததால் ''ஆழ்வார் பட்டவர்த்தி'' என்ற பெயருடன் இன்றும் அழைக்கப்படுகின்றன.

''பேரானை, குறுங்குடியெம பெரு
மானை, திருத்தண்கால்
ஊரானைக் கரம்பனூர் உத்தமனை...
......''

என்று திருமங்கைமன்னன் பாடுகிறார். கங்கையிற் புனிதமாகிய காவிரி நதி பாயும் சோழ நாட்டில் திருச்சிராப் பள்ளி ஜில்லா, லால்குடி தாலுக்காவில், கொள்ளிடம் வட கரையில் இத்தலம் உள்ளது. திருக்கோயில் தல விருக்ஷம கதம்ப மரம். இயற்கை அழகும், கலை அழகும் பொருந்தியது இத்தலம். புருஷோத்தமர் கிழக்கு நோக்கியும், பிக்ஷாடனர் மேற்கு நோக்கியும் உள்ளனர். கோயிலைச் சுற்றி உள்ள நன்செய் நிலங்கள் கோயிலுககுக் கம்பீரமான தோறறம் அளிக்கின்றன.

திருமங்கை ஆழ்வார் இத்தலத்தை மற்ற உன்னதத் தலங்களோடு ஒப்பிட்டு ஆநந்தப்படும் காட்சியை நாம மீணடும் காண்கிறோம்.

'திருப்பேர் நகரில் பள்ளிகொண்ட அப்பக்குடத்தானும், திருக்குறுங்குடியில் நம் ஆழ்வாராகத் தோன்றிய பெருமானும், திருத்தண்காலென்ற பாண்டிய நாட்டுத் திருப்பதியொன்றில் தன் ப்ரபாவத்தை மறைத்து ஊராரைப்போலிருப்பவனும், திருக்கரம்பனூரிலே உத்தமனுயிருப்பவனும், என்று பலவாறு புருஷோத்தமனை வர்ணிக்கப்படுகிறார்.

இத்தலததின் பெயர்கள் :

இத்தலம் உத்தமர் கோயில் என்றும், திருக்கரம்பனூர், பிக்ஷாண்டார் கோயில், கதம்பவனம், திரிமூர்த்திகள் க்ஷேத்திரம், ஆதிமாபுரம் எனவும் பெயர்கள் பெறும். கதம்பமஹரிஷிக்குத் திருமால பிரத்யக்ஷமானதால் திருக்கரம்பனூர் என்றும் ஈசுவரன் பிக்ஷாடன மூாத்தியாக இத்தலத்தில் கோயில் கொணடு எழுந்தருளி இருப்பதால் பிக்ஷாணடார் கோயில், பிச்சையூர் என்றும், பிரம்மதேவனைத் திருமால் தனது நாபியில் வைத்துக் கொண்டு இத்தலத்தின் தேவதையாக அமர்ந்திருப்பதால் ஆதிமாபுரம் என்றும், பிரம்மபுரம் என்றும், இத்தலத்தில் முன்காலத்தில் நீப விருட்சங்கள் நிறைந்த வனமாக இருந்ததால் நீபவனம் (கதம்பவனம்) என்றும், பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும் இவ்வூர் ஆலயத்தில் எழுந்தருளியிருப்பதால் திரிமூர்த்தி க்ஷேத்திரம் என்றும் பெயர்கள் வழங்கலாயின. திருக்கரம்பந்துறை, குணசீலமங்கலம் என்னும் பெயர்களும் உண்டு.

மூர்த்திகளின் பெயர்கள் :

இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் மஹாவிஷ்ணுவுக்குப் புருஷோத்தமர் என்றும், தாயாருக்குப் பூரணவல்லி (பூர்வா தேவி) என்றும், சிவபெருமானுக்குப் பிக்ஷாடனமூர்த்தி என்றும் அம்பாளுக்குச் சௌந்திர பார்வதி எனவும் திருநாமங்கள் வழங்கப்படுகின்றன.

இறைவன் அன்பர்கள் வழிபாடு செய்வதற்கு எளிதாக அமைந்திருக்கிறார். தெய்வத்தன்மையை மறைத்து, சௌலப்யத்தைப் பொலிவுறச் செய்வதற்கேதான் திருமகளோடு சகல உயிர்களையும் காப்பாற்றி வருகின்றார். சகல குணங்களிலும் மேம்பட்டு விளங்குவதால் எம்பெருமானுக்கு உத்தமர் என்ற திருநாமம் பொருந்தியிருக்கிறது. சிவபெருமான் பிக்ஷாடன மூாத்தியாய் இங்கு உறைந்திருப்பதால் பிக்ஷாடணமூர்த்தி எனப் பெயர் பெறுவர். இத்தலத்திற்கு பிக்ஷாடனக் கோலத்தோடு வரும் பொழுது, கருணை வள்ளலான புருஷோத்தமர் பிராட்டியாரைக் கடாக்ஷிக்க, அப்பிராட்டியார் இட்ட பிக்ஷையில் பிரம கபாலமான அப்பிக்ஷா பாத்திரம் பூர்ணமாக நிரம்பப் பெற்றமையால் பிராட்டியாருக்குப் பூரணவல்லி என்ற திருநாமம் ஏற்பட்டது. சிவபெருமானுடைய தேவி அழகான வடிவத்தோடு எழுந்தருளி

திருமலையில 3–8–79 முதல் 6–8–79 வரை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமிக்கு பவித்ரோத்ஸவம் நடைபெறும்.



யிருப்பதால் சௌந்தர பார்வதி எனப் பெயர் வழங்கலாயிற்று.

தலப் பெருமைகள் :

இத்தலம் இயற்கை வளமுள்ள இடத்தில் அமைந்துள்ளது. சுற்றிலும் வயல்களும் தோப்புகளும் சிற்றோடைகளும் அமைந்துள்ளன. பிரமன், திருமால், பிக்ஷாடனர் ஆகிய மும்மூர்த்திகளும் காட்சி தரும் இக்கோயில் சமய வெறுப்பில்லாமல் சமரச நோக்குடன் வழிபாடு செய்வதற்குறிய தலம்.

இத்தலத்தில் மார்க்கண்டேயர், ஜனகர், கருடன் முதலியோர் வழிபட்டுப் பேறு பெற்றனர் என்ற கொள்கை பரவியிருக்கிறது. இக்கோயிலில் புருஷோத்தமர் சந்நிதியின் மூலஸ்தானத்தை ஒட்டியே பிக்ஷாடனர் சந்நிதி தென்புறத்திலும், தசரத லிங்க சந்நிதி வடபுறத்திலும் இருக்கின்றன. இக்கோயிலை வழிபடுவோர் வலம் வரும்போது மூன்று சந்நிதிகளையும் சேர்த்துத்தான் வலம் வர வேண்டும்.

சரித்திர உண்மைகள் :

சுற்றுப் புரத்தில் நல்ல மதில்கள் அமைந்திருந்ததால் கி பி. 1751 ஆம் ஆண்டில், ஆங்கில–பிரெஞ்சு சண்டைகளில், தளபதி ஜீன்ஜென் என்பவர் திருச்சியிலிருந்து பின்னேறிய பொழுது இக்கோயில் பந்தோபஸ்தாயிருந்ததால், இதற்குள் இருந்தனராகவும், பிரெஞ்சு துருப்புகள் இக்கோயிலை முற்றுகை இட்டனர் என்பதும், திருச்சி ஜில்லா Gazetteer என்ற கவர்மெண்டு ரிகார்டில் விளக்கம் தெரிவிக்கப்படுகிறது.

திருக்கோயிலில் நடைபெறும் விழாக்கள் :

புருஷோத்தமர் கோயிலில், சித்திரை மாதம் சித்ரா பௌர்ணமியில் பிரம்மோத்ஸவம்; ஆவணி மாதத்தில் ஜ்யேஷ்டாபிஷேகம்; ஆவணியில் பவித்ரோத்ஸவம்; புரட்டாசியில் நவராத்ரி உத்ஸவம். திருக்கார்த்திகைத் தீபத்திற்கு ஈசுவரரும் பெருமாளும் சேர்ந்தாற்போல் புறப்பாடு. மாசிமகத்தன்று பெருமாளுக்கு கொள்ளிட நதியில் தீர்த்தவாரி.

சிவாலயத்தில் வைகாசி விசாக பிரம்மோத்ஸவம்! திருவாதிரையில் நடராஜரும், பங்குனி உத்திரத்தில் சுப்பிரமணியரும் புறப்பாடு. தைப் பூசத்தன்று சிவபெருமான் கொள்ளிட நதியில் தீர்த்தவாரி,

புராண வரலாறு ;

1. பிரமன் வழிப்பட்டது

திருமாலின் நாபிக் கமலத்தில் தோன்றிய பிரமன், தன் பிதாவின் கட்டளைப்படி, பகவானின் கல்யாண குணங்களை எல்லோருக்கும் எடுத்துச் சொல்லி வந்தார். பகவானைத் தன் சத்திய லோகத்தில் வைத்துப் பூஜை செய்தும் வந்தார். பகவான் இத் தலத்தில் கதம்ப விருக்ஷமாக உருக் கொண்டு அமைந்ததன் நிமித்தம், பிரமன் இங்கு வந்து, பகவான் இருப்பிடம் கண்டு, தமது கமண்டல தீர்த்தத்தால் அபிஷேகம் செய்ய, அத் தீர்த்தம் ஒரு குளமாக நிறைந்தது. அத்தீர்த்தக் கரையில் கதம்ப முனிவர் இறைவனை அடைய வேண்டி, கடுந் தவம் புரிந்து வந்தார். இறைவன் காட்சி அளிக்கவே, முனிவர் அவ்விடத்திலேயே அமர நிலையை அடைந்தார். புருஷோத்தமர் சந்நிதியில், அவர் முன்னிலையில் கதம்ப முனிவர் எழுந்தருளியிருப்பதை நாம் காண்கின்றோம்

2. பிக்ஷாடனர் வரலாறு :

தாருக வனத்திலுள்ள முனிவர்கள் சிவபக்தியற்று, கர்மத்தாலேயே மோக்ஷமடையலாமென எண்ணினர். பெருமாள் அழகிய கோலத்துடனும், வசீகரிக்கும் தோற்றமுடனும் பிரம்ம கபாலம் கைக்கொண்டு முனிவர்களிடம் சென்றான். தங்களிடம் வந்தவரை அறிந்துக்கொள்ளவில்லை ரிஷி புங்கவர்கள். அவருக்குத் தீங்கு விளைவிக்கும் போக்கில் ஓர் யாகஞ் செய்தனர். அதிலிருந்து பல உயிர்ப் பொருள்களை வரச் செய்தனர். பெருமாள் தனது சக்தியால் எல்லாவற்றையும் அடக்கி ஆண்டான். வேள்வியிலிருந்து நெருப்பு, புலி, மானும் மழுவும் வந்தன. புலியைக் கொன்று, அதன் தோலை ஆடையாக அணிந்துக் கொண்டான். தோன்றின பாம்புகளை ஆபரணங்களாக அணிந்தான் பிறகு ரிஷிபுங்கவர் மந்திரங்களை ஏவினர். அம்மந்திரங்களை உடுக்கை வடிவத்தில் தாங்கினான். முனிவர்கள் தோல்வியடையவே. பகவானின் இயற்கையை அறிந்தனர். அவரிடம் சரணாகதி அடைந்துத் தங்களை மன்னிக்குமாறு ரிஷிபுங்கவர் சரணாகதி அடைந்தனர்.



நவநீத கிருஷ்ணன்
K. சீதாராமன், கோயம்பத்தூர்.

இத்தலம் மிக்க மகத்துவம் உடைத்தாயுள்ளது; இதிகாச சிறப்பும் வரலாற்றுச் சிறப்பும் கொண்டது. இத் திருத்தலத்தில் மூவரும் ஒருங்கே அமர்ந்ததால் உத்தமமான ஆலயமாயிற்று. இங்கு அமர்ந்த உத்தமனை தரிசித்தாலேயே நாம் பூரணமடைவோம். தொண்டரடிப்பொடி ஆழ்வாருடன் இப்பள்ளிகொண்ட பெம்மானை

நாமும் கீழ் வரும் அப்பாடலால் அனுபவிப்போம்:

''பச்சைமா மலைபோல் மேனி
பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா! அமரர் ஏறே!
ஆயர்தம் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர யாம் போய்
இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்''

இறுதிக்கு வந்தோம்:

இதுவரை மூவர் அமர்ந்த திருக்கோயிலைக் கணடோம்; களி கூர்ந்தோம்.

நம் முக்கிய கருத்தை இங்கு பகர்வோம். பக்தி எம்மதத்தினர்க்கும் பொதுவானது. பக்திக்கு பொது இயல்பு ஒன்றுண்டு. பக்தியை வளர்ப்பதற்காக உதவும் பெருந்துணையாவது உருவ வழிபாடு. இறைவனது உண்மையான, திவ்ய அன்பு மயமான வடிவத்தை இருதயத்தில் வழிபட்டாலும், அது பெரும் நன்மை அளிக்கின்றது. நினைப்பவரது நெஞ்சையே கோயிலாகக் கொண்டு இறைவன் அன்போடு எழுந்தருளுகிறான். திருக்கோயில்களிலே நமது கண் காணும் பொருட்டுத் திருமேனி கொண்டு இறைவன் எழுந்தருளியிருக்கிறான். நாம் அன்போடு வழிபட்டு உய்வடைதற்காகவே தனது சர்வ சக்தியையும் அடக்கிக் கொண்டு அமர்ந்துள்ளான். கோயிலிலுள்ள உருவத்திருமேனியை இறைவனது அவதார வடிவம் என்பர் பெருந்தகையர்.

இறைவனது பெருமையை அநுபவிப்பதே மானிட நோக்கம். நினைப்பவர் நெஞ்சையே எம்பிரான் கோயிலாகக் கொள்கிறான். இறைவன் பிரியமாக வாழுமிடம் அன்பர்களது நெஞ்சம். கோயில்களில் அவன் எழுந்தருளியிருப்பது, மக்களை அடியார்களாக்கி, அவர்களின் உள்ளங்களில் எழுந்தருளி, அடியார்கள் இனிதாக வாழ்தலைக் கருதியே.

அடியார்களது நெஞ்சத்து ஊறிப் பாயும் பக்தி வெள்ளம் இறைவனை நோக்கிச் செல்கின்றது. அத்தகையோருக்கு நாளும் கோளும் எல்லாம் எப்போதும் 'நல்ல நல்ல அடியார் அவர்க்கு மிகவே' என்றிருப்பார். இச்செய்யுளை திருஞான சம்பந்தர் (16) திருநாவுக்கரசரிடம் (61) திருமறைக்காட்டில் இருவரும் இருந்த போது கூறியதை இங்கும் கண்டு நம் மனத்தை திடப்படுத்திக் கொள்வோம்;

''வேயுறு தோளிபங்கன் விடமுண்ட
கண்டன்
மிக நல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேல்
அணிந்தென்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்
வியாழன்
வெள்ளி சனி பாம் பிரண்டு
முடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல
நல்ல அடியார்
அவர்க்கு மிகவே''

'பார்வதி தேவியின் பர்த்தாவாகிய சிவபெருமான் ஆலகால விடத்தை உண்டு தரித்துக் கொண்ட கழுத்தை உடையவனுமான பெருமான், மிகவும் இனிய வீணையை வாசித்துக் கொண்டுள்ளவன். குற்றமற்ற சந்திரனையும் கங்கையையும் திருமுடிமேல் அழகாகக் கொண்டுள்ளவன். இத்திருக்கோலத்தில் என் மனத்திலே குடி கொண்டவன். ஆதலால் சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, மற்றும் ராகு கேது களாகிய இரண்டு பாம்புகளோடுடன் சேர்ந்த நவக்கிரகங்கள் குறறமற்ற நல்லனவாகும். ஈசனுடைய அடியவர்களுக்கு கோள்களால் தீங்கு உண்டாகாது. அவை மிகவும் நல்லவை.

திருஞானசம்பந்தர் திருவாக்குப்படி நாம் இறைவனை மனம், மொழி, மெய்யால் அனுபவிப்போம். நவ கிரகங்கள் நம்மை அணுகா. தக்ஷிணா மூர்த்தியை நம் மனக் கண்ணால் நிறுத்துவோம்.!

* * *

# ஆழ்வார்களும் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமமும்

பகவான் ஸ்ரீமந்நாராயணனுடைய நிறைந்த கல்யாண குணங்களாகிய தேனினும் இனிய அமுதக் கடலில் மூழ்கி மூழ்கி மகிழ்ந்தவர் பன்னிரு ஆழ்வார்கள். ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரங்களில் பகவானுடைய ஆயிரம் நாமங்களையும்



விளங்குவனவாகவே அணி அணியாக அமைந்திருக்கின்றன. எனவே ஸஹஸ்ர நாமத்தின் மகிமையை உலகறியச் செய்த ஆழ்வார்களின் பாசுரங்களில் சிலவற்றைப் படித்து இன்புறுதல் வேண்டும்.

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தின் மகிமையையும் நாம் தெரிந்துகொள்ள வேண்டியது நமது தலையாய கடமையாகும். ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தின் அருமையும் பெருமையும் அநந்தம்; அபாரம். ஒரு கல்வித் தீபம் பல தீபங்களை சுடர்விட்டுப் பிரகாசிக்கச் செய்வது போன்று ஒரு தடவை அதைச் சொன்னாலும், படித்தாலும், படிக்கக் கேட்டாலும், நமக்கு மனோ நிம்மதியும், சாந்தியையும் அளவற்ற மகிழ்ச்சியும் வேதாந்தத்தையும் அது நமக்கு அள்ளியள்ளி கொடுக்கிறது; பக்தி மார்க்கத்தில் சிரமத்துடன் செல்பவர்களுக்கு மின் சாரத்தைப்போல் அது உத்வேகம் ஊட்டுகிறது என்பதை எல்லோரும் அறிவர். ஏனெனில் பக்தி ஒன்றே தான் மனிதனை இன்பமடையச் செய்யக் கூடியது; தர்க்கம், வாதம் முதலியவற்றால் அதை அடைய முடியாது.

பகவானுடைய நிறைந்த கல்யாண குணங்களை குன்றின்மேலிட்ட விளக்கு போல், பிரகாசிக்கச் செய்யும் 'ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரத்தை உனக்கு நான் சொல்கிறேன்' என்று கூறி, பீஷ்ம பிதாமஹர் தர்ம புத்திரருக்கு அந்த அபூர்வமான ஸ்தோத்திரத்தை உபதேசித்தார். இந்த உண்மை ஐந்தாம் வேதமாகிய மகாபாரதத்தில் ஆறு சாஸநிக பர்வத்தில் சம்வாத ரூபமாக அமைந்துள்ளது என்பதைக் காண்க

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு ஸ்ரீ ஆதிசங்கரரும், ஸ்ரீ பராசரபட்டரும், முறையே அத்வைத, விசிஷ்டாத்வைத சித்தாந்த பாஷ்யங்களை இயற்றியிருக்கிறார்கள். த்வைத சித்தாந்தப்படி, ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகளும் பாஷ்யத்தை இயற்றியிருக்கிறார். எனவே ஆச்சாரியர்களும், ஆழ்வார்களும், அவர்கள் போற்றும் சாஸ்த்திரங்களும் ஒன்று கூடிப் புகழ்வது ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரங்களாகும்.

வைணவப் பக்திப் பூங்காவில் பட்டொளி வீசிப் புகழ்பெற்ற ஆழ்வார்களின் பாசுரங்களில் ஆயிரம் நாமத்தின் மகிமை பார்க்கக் காணலாம். சுருங்கக் கூறினால் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம் இம்மையில் சகல சுகங்களையும், மறுமையில் மோக்ஷத்தையும் அளிக்கவல்லது; ஸஹஸ்ர நாம ஜபத்தால் மனிதன் அடையக் கூடாத பயனே உலகில் இல்லை என்று கூறலாம்.

**ஆழ்வார்கள் ஸஹஸ்ர நாமத்தைப்பற்றிக் கூறிய பாசுரங்கள் :**

எத்திக்கும் வாழத் தேமதுரத் தமிழில் இயற்றப் பெற்ற திவ்யப் பிரபந்தங்களில் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தைப்பற்றிப் பல இடங்களில் எடுத்துக் காட்டப் பட்டிருக்கிறது. அவையெல்லாவற்றையும் இச்சிறிய கட்டுரையில் அச்சிட முடியாது.

---

திரு. R. பத்மநாபன், B.A., B.T.,
வேலூர் — 12

---

கணக்கிட்டுப் பார்த்தால் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸர நாமத்தைப்பற்றிய செய்திகள் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் ஏறத்தாழ நூற்று ஐம்பதுக்கு மேல் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. எனவே சிலவற்றை மட்டும் நாம் நாம் காண்போம்.

**பெரியாழ்வார் பாசுரம :**

முதன் முதலில் பெரியாழ்வார் பாசுரத்தைக் காணலாம்:

''அண்டக் குலத்துக் கதிபதியாகி
அசுரரி ராக்கதரை
இண்டைக் குலத்தை எடுத்துக்களைந்த
இருடீகேசன் தனக்கு
தொண்டைக் குலததிலுள் ளீர்
வந்தடி தொழு
தாயிர நாமம் சொல்லி,
பண்டைக் குலத்தைத் தவிர்த்துப்
பல்லாண்டு பல்
லாயிரத் தாண் டென்மினே''

(திருப்பல்லாண்டு-5)

பாசுரத்தில் ஆழ்வார் பகவானுடைய ஆயிர நாமத்தைச் சொல்லி, வாயாற புகழுமாறு நம்மை யெல்லாம் கூவி அழைக்கிறார்.

அடுத்ததாக, ஆழ்வார்களில் பிரதமராகக் கருதப்படும் நம்மாழ்வாரும் திருவாய்மொழி 8-1-10 பாசுரத்தில்,

''தாள்களை யெனக்கே தலைத்தலை
சிறப்பத்
தந்தே பேருதவிக் கைம் மாறு
தோள்களை யாரத் தழுவி யென்
றுயிரை
அறவிலை செய்தனன் சோதீ,
தோள்களா யிரத்தாய்! முடிகளா
யிரத்தாய்!
துணை மலர்க் கண்களா யிரத்தாய்!
தாள்களாயிரத்தாய்! பேர்களா
யிரத்தாய்!
தமிய னேன் பெரிய அய்யனே!

மேற்படி பாசுரத்தில்ஆழ்வார், பெருமாளுடைய ஆயிரம் உறுப்புக்களையும் போற்றி, ஆயிரம் பெயர்களைப்பற்றியும் போற்றிப் புகழ்கிறார்.

அடுத்ததாகத் திருமங்கை ஆழ்வார் தம்முடைய பெரிய திருமொழியில் 2-3-8-ஆம் பாசுரத்தில்,

'பள்ளியி லோதி வந்ததன் சிறுவன்
வாயிலோ ராயிர நாமம்'

என்று முதலில் கூறுவதைக் காணலாம். இதைப்போல் பல பாசுரங்களை எடுத்துக் கூறினால் கட்டுரை விரியும் என்பதற்காக இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்.

எனவே தற்காலத்தில் பலவிதமான இன்னல்களை அனுபவிக்கும் மக்களுக்கு பகவந்நாமத்தை ஜபிக்க ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தைத் தவிர மற்றொரு வழியில்லை. அந்த ஸ்தோத்திரத்தைப் பாரயணஞ் செய்து ஸ்ரீ மகாவிஷ்ணுவின் கிருபைக்குப் பாத்திரர்களாவோமாக!



ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி—பூனா—திரு. எம். சங்கர்

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

கொள்ள தற்கொலை செய்து கொள்ள முயன்றதையும் அனுமன் கூறிய செய்திகளையும் மற்றவர்கள் எண்ணிப் பார்த்து சீதையின் கற்புத் தன்மையினையும், மாசற்ற தன்மையும் உணர்வர் அன்றோ? ஆகவேதான் இராமன் இவ்வாறு சீதையினைக் குறை கூறுவது போல, மற்றவர்கள் சிந்தையில் சிந்தனைகளை எழுப்பி, சீதையின் கற்பினை, அவர்களும் உணருமாறு செய்கிறான். இராமன் முயற்சி வெற்றியும் பெறுகிறது. சீதையின் மாசற்ற தன்மையைச் சுற்றியுள்ளவர் அனைவரும் உணர்ந்து, வாய் விட்டு அரற்றுகின்றனர். இதனையே கம்பர்

''முனிவரு மமரரு மற்று முற்றிய
நினைவரு மகளிரு நிருத ரென்
றுளார்
அனைவரும் வானரத் தேவரும்
வேறுளார்
அனைவரும் வாய்திறந் தரற்றி
னாரரோ''

என்று கூறுவார்.

ஒரு கற்பு மகள், தன் கற்பைப் பிறர் ஐயுற்றாலே சற்றும் பொறுக்க மாட்டாள் என்றிருக்கும்போது, தனது கணவனே தன் கற்பை ஐயுற்று தன்னை மறுத்தான் என்றால் அவள் நெஞ்சு எவ்வாறு துடிக்கும்? தன் கணவன் கொண்ட ஐயம் தவறு என்றும், தன் கற்பில் மாசு இல்லை என்றும் உணர்த்த முயல்வாள். முடியாது போயின், தன் உயிரை விட்டு விடுவாளே தவிர, கணவனின் ஐயத்தைத் தாங்கி உயிர் வாழ மாட்டாள். இவ்வாறேதான் சீதையும், இராமனது உள்ளக் கிடக்கையை அறியாதவளாக, இராமனது சொற்களைக் கேட்டு அணலிட்ட புழுவெனத் துடிக்கிறாள். இனி உயிர் வாழுவதில் பயனில்லை என்ற முடிவுக்கும் வருகிறாள். எனினும், தன் குற்றமற்ற தன்மையை இராமனுக்கு உணர்த்த கடைசி முயற்சியும் செய்கிறாள் சீதை. இராமனை நோக்கி, ''அருளாளனே! அனுமன் என்னைப் பார்த்து, என்னை மீட்டுச் செல்ல, நீ வருவாய் என்று தேறுதல் கூறிச் சென்றான். எல்லோரினும் மேலான அனுமன் நான் சோர்ந்து கிடந்ததையும் தற்கொலை செய்து கொள்ள முயன்றதையும் உன்னிடம் எடுத்துக் கூறவில்லையா? இவ்வளவு காலமாக நான் விழிப்போடு காத்து வந்தனவாகிய சிறந்த தவமும், நற்குண நற்செய்கைகளும், கற்பும் ஆகியவை நீ அறிந்திடாத தனால், பைத்தியச் செயலெனும்படி யானது. பேதமையுடையவளான நான் உலகம் போற்றும் உத்தம பத்தினி. பிரமனாலும் மாற்ற இயலாத மன நிறையை உடையவள். அங்ஙனம் இருந்தும் உலகத்தாருக்குக் கண் போன்ற இராமனே! நீ தவறெனக் கூறினால், அக்கருத்தை மாற்றும்படியான வகையை அந்தத் தெய்வத்தாலேயே முடியாதபோது நான் என்ன செய்வேன். சொரூப ரூபியே! இங்ஙனமாகுதலால் இனி நான் என் குற்றமற்ற கற்பு நெறியை வேறு யாருக்குத்தான் சொல்லி யுணர்த்தக் கடவேன். இந்நிலையில் எனக்கு இறத்தல் போலச் சிறந்தது வேறொன்றுமில்லை. நீ கட்டளையிட்டது தகுதியானதே. என் வினைப் பயன் அவ்வாறு உள்ளது போலும்.'' என்று தன் தவறற்றத் தன்மையை எடுத்துக் கூறி, துயர மிகுதியால் இலக்குவனைப் பார்த்து 'இடு தீ' என்று கூறுகிறாள் பிராட்டி.

இங்ஙனம் சீதை கூறியவுடன் இலக்குவன் தன் தமையனைப் பார்க்கிறான் சீதையின் கற்பின் ஆற்றலை நன்கு உணர்ந்த இராகவன், அவளது மாசற்ற தன்மையை, கற்பினை உலகத்தாருக்கு வெளிப்படுத்த அதுவும் சிறந்த வழியே என்று உணர்ந்தவனாக, இளையவனுக்கு கண்களாலேயே ஆணையிடத் தீயும் அமைக்கப்படுகிறது. சீதை இராமனைத் துதித்தவாறு தீயினை வலம் வருகிறாள். அதனைக் கண்ட உலகத்தின் நடுக்கத்தினைக் கம்பன் நான்கு பாடல்களினால் வெளிப்படுத்துவான். அவற்றுள் இரண்டு பாடல் இதோ:

''வலம் வரு மளவையின் மறுகி
வான் முதல்
உலகமு முயிர்களு மோல மிட்டன
அலமவர லுற்றன லலறி யையவிச்
சலமிது தக்கில தென்னச்சாற்றின''
(மீட்சிப் படலம்-81.)

''நடுங்கினர் நான்முகன் முதல நாயகர்
படங்குறைந் ததுபடி சுமந்த பாம்புவாய்
விடம் பிறந் துளதென வெதும்பிற்
றுலுலகு
இடந்திரிந் தனசுடர் கடல்களேங்கின''
(மீட்சிப் படலம்-83.)

கோப்பெருந்தேவி புறநானூற்றுப் பாடல் ஒன்றில் கூறியிருப்பதைப் போன்று கற்பு மகளுக்கு நெருப்பு நல்ல குளிர்ந்த பொய்கை போன்றது. செங்கமலச் செல்வியாகிய சீதை, நீரில் எழுந்த செந்தாமரை மலராகிய தன் வாழிடத்தைச் சென்று சேர்வாள் போல அந்தத் தீயில் வேகமாகப் புகுகிறாள். குதித்த அளவிலே, அந்தத் தீ, பிராட்டியினுடைய கற்புத் தீயினால் எரிகிறது இங்ஙனம், தன்னுள் குதித்த சீதையின் கற்புக் கனலால் தவிப்படைந்து, எரிகின்ற வடிவையுடையவனாகி, உடனே அக்னி தேவன் இராமனைக் குறித்து அபயம் வேண்டி பேரொலி செய்து கதறியவனாய், சீதையினை இரு கரங்களால் தாங்கி எழுகிறான். தீயினுள் புகுந்த சீதை அத்தீயால் சற்றும் துன்பப்படவில்லை என்பதைக் கம்பன் மிக நுண்ணியமாக உணர்த்துவான். சீதையின் கூந்தலில் சூட்டப்பட்ட மலரானது பாடுகின்ற வண்டொடும், துளிக்கின்ற தேனொடும், நெருப்பில் ஆய்ந்த அடையாளம் சிறிதுமின்றி நீரில் தோய்த்து எடுத்ததைப் போல குளிர்ந்து காணப் பட்டன என்பார் கம்பர். அவ்வரிகள் இதோ:

''பாடிய வண்டொடும் பனித்த
தேனொடும்
சூடிய மலர்கள் நீர் தோய்த்த
போனறவால்''
(மீட்சிப் படலம்-87)

இவ்வனம் எழுந்த அக்கினி பகவன் சீதையின் கற்பினை உலகம் முற்றும் உணருமாறு எடுத்தோதுகிறான். தூய்மைக்கு மறு உருவான அக்கினியே சீதையின் கற்பினை முழுதும் ஒப்புக் கொண்டு உலகுக்கு உணர்த்தினார் என்றால், சீதை ஒரு கற்புக்கரசி என்று நம்மால் ஒப்புக் கொள்ளாமல் எப்படி இருக்க முடியும்? ஆகவே சிறை இருந்த செல்வியின் கற்பின் திண்மையை உணர்ந்த நாம், இனி 'அழகுச் செல்வி' என்ற உட்பிரிவின் தலைப்பில் சிறையிருந்த செல்வியின் அழகினைப் பற்றி அடுத்த இதழில் பார்ப்போம்.

(தொடரும்)

# உணவும் குணமும்

* * *

உணவு உயிரின் வளர்ச்சிக்கு பெரிதும் உதவும். அதை மனிதர்கள் பதப் படுத்தியும், விலங்குகள், பச்சை யாகவும் உண்கின்றனர். ஐந்தறிவு படைத்த விலங்கானது அதனால் உண்ணப்படும் உணவை ஆராய்ந்து உண்பதில்லை. மனிதர்கள் அப்படி இருப்பது நியாயமல்ல. மனிதன் தான் உண்ணும் எந்த உணவினையும் இறைவனுக்குப் படைத்த பின்தான் உண்ண வேண்டும்.

இதனால், அதாவது இறைவனுக்கு படைப்பதற்கு முன்னால் உண்ணும் உணவு உயரிய பண்புகளைத் தராது. உடல் நலனையும் உள்ள நலனையும் கெடுக்கும் தன்மை உடையது. இதனால் பாதிக்கப்பட்டவர்களுள் முக்கியமானவர் பாண்டவ, கௌரவர் களின் பாட்டனாரான பீஷ்மர். அவரை பாண்டவரும் கௌரவரும் பிதாமகர் என்றே அழைத்தனர்.

பத்தாம் நாள் போரில் அர்ஜுன னின் அம்பினால் அடிபட்டு பாரத யுத்தம் முடியும் வரையில் உயிருடன் இருக்க வேண்டும் என்ற விருப்பத்தால் உயிருடன் இருந்தார். அச்சம யத்தில் கண்ணபிரான் பாண்டவர் களிடம் ''உங்கள் பாட்டனார் இராஜ நீதியும், உலக தர்மமும் அறிந்தவர். அவரிடம் நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டியதை கற்றுக் கொள்வீர் களாக!', எனக் கூறி அவர்களை பீஷ்மரிடம் அழைத்துச் சென்றார்.

அவர் விருப்பத்தை பீஷ்மர் அறிந்து மனம் மகிழ்ந்தார். அதன்படி கூற வேண்டியதை கூறத் தொடங்கினார்: ''பேரன்மார்களே, மதுசூதனனின் விருப்பத்திற்கிணங்க உங்களுக்கு இந் நீதிகளை போதிக்கிறேன், கவனமாகக் கேட்டு நல்லாட்சி புரிவீர்களாக!'' என்றார். அச்சமயத்தில் அவர் போதித்த நீதிகளில் ஒன்றுதான் விஷ்ணு சகஸ்ர நாமம் (ஸ்ரீ மகா விஷ்ணுவின் ஆயிரம் பெயர்களை கூறும் துதி). இச் சமயத்தில் அவர் அரச னுடைய அவையில் உள்ள சான்றோர் களின் தகுதிகளையும் நடந்து கொள்ள வேண்டிய முறைகளையும் போதித்தார். அப்போது திடீரென்று ஒரு பெண் சிரிக்கும் ஒலி கேட்டது. அது வேறு யாருமல்ல. பாண்டவர்களின் மனைவி யான திரௌபதிதான். அவள் நடந்து கொண்ட முறை பாண்டவர் களுக்கு மன வருத்தத்தை ஏற்படுத் தியது. அருகில் உள்ள கண்ணபிரான் ஒன்றுமறியாதது போல இருந்தார்.

திரு. ஆர். ராதாகிருஷ்ணன்,
திருநெல்வேலி - 7.

பிதாமகர் பாண்டவர்களிடம், ''குழந்தைகளே! திரௌபதி ஒன்றும் அறியாத அறிவிலி அல்ல. அவள் ஏதேனும் ஒரு காரணத்துடன்தான் சிரித்திருப்பாள் அவளைக் கேட்டுத் தெரிந்து கொள்வோம். மனம் வருந் தாதீர்கள்'' என்று கூறி திரௌபதி யிடம் சிரித்ததற்குரிய காரணத்தை கேட்டார். அதற்கு அவள், ''பிதா மஹரே! என்னுடைய மதியின்மைக்கு மன்னிக்க வேண்டும். நான் எவ் வளவோ முயன்றும் பழைய நிகழ்ச்சி கள் என்னை சிரிக்கவைத்து விட்டன'' என்றாள். அருகில் இருந்த அரிகேஷன், ''தங்கையே! அது என்ன பழைய நிகழ்ச்சி'' என்று வினவினான். திரௌ பதி, பாண்டவர்களையும், கண்ணனை யும், பிதாமஹரையும் வணங்கி அவர் களிடம் ''அன்று பாண்டவர்களாகிய நீங்கள் சூதினால் செல்வம் இழந்ததை பிதாமஹர் பார்த்துக் கொண்டுதானே இருந்தார். மேலும் என் மானம் அழிக்க துச்சாதனன் முயன்றபோதும் துரியோதனின் கொடுஞ் சொற்களின் போதும் பார்த்துக் கொண்டுதானே இருந்தார், அப்போது இராஜ நீதி எங்கே போயிற்று என்று நினைத்த போது சிரித்துவிட்டேன்'' எனக் கூறினாள்.

பீஷ்மர் திரௌபதியையும் பாண்ட வர்களையும், நோக்கி, ''குழந்தை களே! இப்போது ஒரு பெரிய உண் மையை உங்களுக்கு கூறப்போகிறேன். நான் கௌரவர்களின் உணவை உண்டேன். உணவை மட்டுமா உண்டேன்! அவர்களிடம் இருந்த தீய குணங்களையும் உண்டுவிட்டேன். அத் தீய குணம் என்னைப் பற்றிக் கொண்டது. அதனால்தான் அன்று அதர்மத்தைக் கணடு என் உள்ளம் கொதிக்கவில்லை. ஆனால் அவர்கள் இட்ட உணவினால் உண்டான தீய இரத்தம் இன்று விசயனின் அம்புகளின் வழியே வழிந்தோடி விட்டது. என் நிலையான இரத்த குணம் உங்களுக்கு நீதி நெறிகளைப் புகட்டியது'' என்று கூறி முடித்தார்.

இந்நிலையில் மானிடர் பலரையும் நாம் காணலாம். கர்ணனும்அப்படியே (உணவினால்) தன்வசம் இழந்தான். எனவே சாதாரண மானிடர்களாகிய நாம் பொது இடங்களில் உணவு உண்ணும்போது முதல் வாய் உணவு இடுமுன் அவ்வுணவை இறைவ னிடத்து காணிக்கையாக்கிய பின் உண்டு மாதவனின் அருளைப் பெறுவோ மாக!



தொடர் கட்டுரை :

# முக்கவி கண்ட காப்பியம்

"சுந்தர காண்டம்"

திரு. டி. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(காபேயன்)
திருப்பதி:

மேலும் ஆசார்யனின் இலக்கணத்தைப் பார்ப்போம்:

आचार्यो वेदसम्पन्नः विष्णुभक्तो विमत्सरः ।
मन्त्रज्ञो मन्त्रभक्तश्च सदा मन्त्राश्रयश्शुचिः ।।
गुरुभक्तिसमायुक्तः पुराणज्ञो विशेषतः ।
एवं लक्षणसम्पन्नः गुरुरित्यभिधीयते ।।

அதாவது, வேதங்களை அறிந்தவனும், விஷ்ணுவினிடத்தில் பற்றுள்ளவனும் பொறுமை முதலான கெட்ட குணங்கள் இல்லாதவனும், மந்த்ரங்களை அறிந்தவனும், அதேபோல் மந்திரங்களில் கௌரவ புத்தியை உடையவனும் எப்பொழுதும் சுத்தமானவனுக மந்திரங்களை ஜபிப்பவனும், தன்னுடைய குருவினிடத்தில் பக்தியுடையவனும், புராண தத்துவங்களை நன்கு அறிந்துவனுமாக எவன் இருக்கிருனே அவனே ஆசார்யன், குருஎன்பதாகும்.

प्रहृष्टः என்ற பதத்திற்கு எப்பொழுதும் சந்தோஷமாக இருப்பவன். அதாவது ஆத்மானந்தந்தை எப்பொழுதும் தியானத்திலிருந்தபடியே அநுபவிப்பவன் என்று பொருளாகும். அவனுடைய நிலை விளக்கிக் கூறப்பட்டுள்ளது.

आह्लादशीतनेत्राम्बुः पुलकीकृतगात्रवान् ।
सदा परगुणाविष्टः द्रष्टव्यः सर्वदेहिभिः ।।

மகிழ்ச்சி என்ற குளிர்ந்த தண்ணீரை கண்களில் உடையவனும், மயிர்க்கூச்சல் எடுத்த சரீரத்தை உடையவனும், எப்பொழுதும் பிறரால் ஸ்தோத்திரம் செய்யப்படுபவனுகவும் எல்லோராலும் நேசிக்கத்தகுந்தவனுவும் இருப்பான். पुनः पुनश्चोत्तमसान्त्ववादी என்று இராமாயண ச்லோகத்தில் காணப்படுகிறது सान्त्वं என்றல் उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः அதாவது உத்தம புருஷன் பரமாத்மாவிற்குச் சமமாகக் கூறலாம். ஸாந்த்வம் என்ற பதத்திற்கு பரமாத்ம விஷயம் என்று கூறலாம். ஆகையால் ஒரு ஆசார்யன் பரமாத்ம விஷயங்களை சிஷ்யர்களுக்கு உபதேசிப்பது என்பதாகும். அடிக்கடி பரமாத்மாவை நினைக்கும்படி செய்ய வேண்டியது ஆசார்யனின் கடமை. எப்படி அடிக்கடி உழுது பண்பட்ட பூமியில் நல்ல விதைகள் முளைக்கக் காரணமாக ஆகிறதோ அதே போல் அடிக்கடி உபதேசிப்பதால் சிஷ்யனுக்கு அதே ஞாபகத்தால் பரமாத்ம ஸ்வரூபம் தெரிய நேரிடும். இக்கருத்தை கீதாசாரியன் கீழ்வரும் வரிகளில் கூறுகிறுன். अभ्यासेनतु कौन्तेय" என்று.நல்ல ஸம்ப்ரதாய சுத்தமானஆசார்யனை அடைந்து சிஷ்யன் அடிக்கடி நல்லுபதேசத்தைப் பெறவேண்டுமென்ற கருத்தினைக் கொண்டுள்ளது கீழ்வரும் ச்லோகம்.

सुस्वागतं वाचमुदीरयान:

இராவணன் சீதையைப் பலவிதமாக மிரட்டி விட்டு அங்கிருந்த அரக்கியர்களிடம் "என்னை மணந்து கொள்ளும்படி சீதையை ஹிம்ஸை செய்யுங்கள்" என்று கூறிவிட்டுச் சென்று விட்டான் சீதை தன் நிலைமையை நொந்து கொண்டு மனம் வருந்தித் தற்கொலை செய்து கொள்ள முயற்சிக்கிருள். தன்னைத் தானே நிந்தித்துக் கொள்கிருள். "என்னுடைய பதிவ்ரதாதன்மை வீணனது. செய்நன்றி மறந்தவர்களுக்குஉபகாரம் செய்வது போலானது என்னுல் அனுஷ்டிக்கப்பட்ட தர்மங்கள். நான் ஒரே பதியை தெய்வமாக வழிபட்டு வந்ததும் வீண், ஆகையால் இனி நான் பிழைத்திருப்பதால் எவ்வித பயனுமில்லை" என்று தீர்மானித்து நடுக்கத்துடனும், வாய் உலர்ந்தவளாகவும், நன்கு மலர்ந்திருந்த சிம்சுபா மரத்தடியை அடைந்தாள். மரத்தடிக்குச் செல்லும் போது பல நற்சகுனங்களைப் பார்த்தாள் சீதை. பிரிந்த தம்பதிகள் சேர்ந்து வாழ்வதற்கு அறிகுறியான சில சகுணங்களை காம சாஸ்திரம் கீழ்வருமாறு கூறுகிறது.

शुभं पुनर्हेमसमानवर्णं ईषद्रजोध्वस्तमिवामलाक्ष्याः ।
वासः स्थितायाः शिखराग्रदत्याः किञ्चित्परिस्रस्तचत्तणाख्याः ।।

சீதையினுடைய தொடைகள் தானுகவே அரைந்தன. இடுப்பிலிருந்த ஆடை தானுகவே அவிழ்ந்து விழுந்தன. இன்னும் பலவகைகளாகும் शिखराग्रदत्याः என்று கூறுகிருர். பெண்களின் பற்களைப்பற்றி ஸாமுத்ரிகா சாஸ்திரம் கூறுகிறது.

स्निग्धाः समानरूपाः सुपङ्क्तयः शिखरिणः । श्लक्ष्णाः ।
दन्ता भवन्ति यासां तासां पादे जगत्सर्वम् ।।
यासां शिखरिणो दन्ताः दीर्घं जीवन्ति ताःस्त्रियः।

நெடுக்கமாகவும், ஒரே மாதிரிகளானதுமாகவும், வரிசையானதுமாகவும் கூர்மையானதுமாகவும், அழகானதுமாகவும், வழவழப்பானதுமாகவும் எந்த ஸ்திரீகளுடைய பற்கள் இருக்கின்றனவோ அந்த ஸ்திரீகளின்காலடியில் எல்லாஉலகமும் என்று.இவ்வளவு துக்கத்திலும் சீதையின் முகம், கிரஹணத்திற்குப் பிறகு ராகுவினிடமிருந்து சந்திரன் விடுபட்டால் எவ்வளவு ஒளி பொருந்தியவனுக இருப்பானே அவ்விதம் சீதையின் முகம் இருந்தது. வால்மீகி சொன்ன கருத்தை கம்பரும் கூறுகிருர்.

"சொற்பிரியாப்பழி சுமந்து தூங்குவேன்
நற்பிறப் புடைமையு நானு நன்றரோ,
கற்புடை மடந்தயர் கதையுளோர்கடாம்
இற்பிரிந் துய்ந்தவர் யாவா யாலொல்"

கற்புடை பெண்களுக்குத் தமது உயரினும் கணவனே சிறந்தவனென்பது கருத்து. இந்த இடத்தில் "சொற்பிரியாப்பழி" என்ற கருத்தை ஸ்ரீதியாகப்ரம்மம் கூறுகிருர். 'காலமு போனு மாடலு நிலுசுனு கல்யாண ராம' என்று கூறுகிருர். சீதை ஒரு பெண்ணின் கர்பத்திலிருந்து பிறவாமல் நிலத்தினின்று தோன்றி அயோனிஜையென்னுஞ் சிறப்புப் பெற்றிருந்தாலும், கர்மயோகத்தினுல் மிக்க மேனமையடைந்துள்ள ஜனகராஜனை வளர்த்த தந்தையாக பெற்ற பெருமை வாய்த்துள்ளவளாதலால் நற்பிறப்பையுடையவளாவாள். இம்மேன்மைகளுக்கு, நற்குண, நற்செய்கைகளுக்கு கெடுதி உண்டாகி விடுமோ என்று அஞ்சினுள் சீதை. வால்மீகி கூறும் போது "एकपत्नीत्वं निरर्थकम्" என்று கூறுகிருர்.

(தொடரும்)

# செய்திச் சுருக்கம்

## திருப்பதியில் கோடைப்பள்ளி

திருப்பதியில் இந்து பிரதிஷ்டானத்தின் ஆதரவில் இந்து சமயம் மற்றும நீதி நெறி சம்பந்தப்பட்ட கோடைப் பள்ளி ஒன்று 16-5-79 முதல் 30-5-79 வரை 15 நாட்கள் நடைபெற்றது. இக்கோடைப்பள்ளி வகுப்புகள் 16-5-79 அன்று தி. தி. தே. செயலாட்சித் தலைவரவர்களால் துவக்கி வைக்கப்பட்டன.

## திருமலையில் 'பவித்ரோற்சவ' விழா

பவித்ரோறசவம் என்ற சொல்லிற்கு 'புனித விழா' எனறு பெயர். கோயில், மற்றும் அதனைச் சுற்றி உள்ள பிரதேசத்தில் நிலவிவரும் பக்திச் சூழ்நிலைக்கு எவ்விதத்திலும் கேடு சூழாதிருக்கவும், கோயிலில் நடைபெறும் பூசை மற்றும் அபிஷேக நாட்களின் போதும் தெரிந்தோ தெரியாமலோ நடைபெறும்புனிதநிலை திரிந்த செயல்களுக்குப் பரிகாரமாகவும் இப்பவித்ரோற்சவம் ஒவ்வொரு ஆண்டும் கோயில்களில் நடைபெறும். இவ்வருடம், திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் வருடாந்திர பவித்ரோற்சவ விழா மூன்று நாட்கள் நடைபெறும். 3-8-79 அன்று நடைபெறும் அங்குரார்ப்பணத்தைத் தொடர்ந்து, 4-8-79 லிருந்து 6-8-79 வரை நடைபெறும். 4-8-79 அன்று பவித்ர பிரதிஷ்டையும், 5-8-79 அன்று பவித்ர சமர்ப்பணமும், 6-8-79 அன்று பூரணஹுதியும நடைபெறும்.

## 'சாக்ஷாத்கார வைபவ' விழா

திருப்பதியிலிருந்து 10 கி. மீட்டர் தொலைவிலுள்ள மங்காபுரத்தில் ஸ்ரீ கல்யாணவேங்கடேஸ்வர சுவாமியின் சாக்ஷாத்கார வைபவ விழா, கோயில் அரங்கத்தில் 1-7-79 அன்று நடைபெறும். ஸ்ரீ வேங்கடேஸ்வரர் சுவாமி ஆகாச மன்னனின் 'மகளான ஸ்ரீ பத்மாவதி அம்மையாரை மணந்து கொண்ட பின், புதிதாக மணஞ் செய்து கொண்ட மணமக்கள் திருமலைக்குச் செல்லுதல்கூடாது என்ற ஒரு கருத்து நிலவியிருந்ததால், சிறிது காலம் அவர்கள் இந்த மங்காபுரத்தில் தான் தங்கியிருந்ததாக உள்ளூர புராணங்கள் செப்புகின்றன.

இவ்விழாவின் போது, அழகிய சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடிய சரித்திரப் புகழ் வாய்ந்த இக் கோயிலில், சமயம் சம்பந்தப்பட்ட பல்வேறு கலை நிகழ்ச்சிகள் நடைபெறும். ஆகவே யாத்திரிகர்கள் இவ்வரிய வாய்ப்பைப் பயன் படுத்தி இக்கோயிலுக்குவருகைபுரிந்து இறைவருள் பெறுவார்களாகுக.

## ஆனிவார ஆஸ்தானம்

திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலில் நடைபெறும் மூன்று முக்கிய 'தர்பார' விழாககளில் ஒன்று இம்மாதம் 17-ம் தேதி நடக்கும் 'ஆனிவார ஆஸ்தானம்'. இவ்விழாவின் போது இறைவன் விலையுயர்ந்த ஆபரணங்களான லக்ஷ்மீஹாரம், மகர கண்டிகை, கிரீடம், ஹஸ்தம் ஆகியவற்றுடன் பத்தர்களுக்கு அரிய காட்சி வழஙகுவார். இவ்விழா எப்பொழுதும் தமிழ் ஆவணி மாதத்தின் இறுதி நாளில் நடைபெறும். அப்போதைய ஆண்டின் வரவு செலவு கணக்கு விவரங்களை முடிவுசெய்து, புதிய ஆண்டின் கணக்குகளை ஆரம்பிப்பதைக் குறிப்பதாக இவ்விழா அமையும்.

## திருப்பதியில் இந்திய ஜனாதிபதி

இந்திய ஜனாதிபதி திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்கள் 3-6-79 அன்று மாலை திருப்பதிக்கு வருகை புரிந்து 4-6-79 அன்று காலை திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வரரின சுப்ர பாத தரிசனம் பெற்றார். இந்த இரு நாட்களின்போது திருப்பதியிலும் திருமலையிலும் பொதுமக்கள் சாலைகளின் இருமருங்கிலும் கூடியிருந்து அவர் வருகைக்கு பலத்த வரவேற்பு அளித்தனர். திருமலையில் செடிவகை ஒன்றிற்கு அவருடைய வருகையின நினைவாக ஜனாதிபதியின் பெயர் வைக்கப்பட்டது.

---

## அத்திகிரி அருளாளர் அரிய ஸேவை

''நகரேஷு காஞ்சீ'' என்று கவி காளிதாஸனும் ''முத்தி தரும் நகரேழில் முக்கியமாம் கச்சி'' என்று வேதாந்த தேசிகனும் புகழப்பெற்ற வைணவத் தலங்களுள் ஒன்றானது ''பெருமாள் கோயில்'' என்றழைக்கப்படும் காஞ்சீபுரம் ஆகும்

''ஸ்ரீ ஹஸ்திசைவ சிகரோஜ்வல பாரிஜாதனை'' எம்பெருமான் இங்கு அத்திகிரியில் அடியார்க்கு இன்ப மாரியாய் அருள்மழை பொழிந்த வண்ணம் எழுந்தருளியிருக்கின்றான்.

இத்திருப்பதியில், 2-7-79 அனறு அனநதஸரஸ் புஷ்கரணியில் இருக்கும் அத்திகிரி வரதர் மூலவர் (அத்திமரத்தாலான அர்ச்சைத் திருமேனி) வெளியில எழுந்தருளப் பண்ணப்பட்டு, மண்டல பூஜை முதலானவை நடைபெறவிருக்கின்றன. இதற்குமுன் 1854, 1892, 1937 ஆகிய வருடங்களில் மண்டல ஆராதனம் செய்யப்பட்டிருக்கிறது. எனவே பக்தர்கள் இத்தருணத்தினை அரிய வாய்ப்பாகக் கொண்டு மேற்படி அத்திகிரி அருளாளனின் அரியசேவையைப் பெற்றுய்ய வேண்டுகிறேன்.

தகவல் :
கூரம். ஸ்ரீவத்ஸ கே. ராஜா, B.Com.,
சென்னை-29.

# ராசிபலன் (1-7-79 முதல் 31-7-79 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., Ph.D
திருப்பதி.

### மேஷம்

ராகுவினுல் கவலைகள்; சனியினுல் பண நஷ்டம் அல்லது கருத்து வேறுபாடுகள அல்லது பிள்ளைகளுடன் பிரிவு; குருவினுல் பண வரவு அல்லது மகிழ்ச்சி அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது புதிய வீடு அல்லது வாகன வாய்ப்பு அல்லது மக்கட்பேறு; செவ்வாயினுல் கருத்து வேறுபாடுகள் அல்லது அலுவலகக் கவலைகள் அல்லது உடல் நலம் கெடுவதால் கவலைகளுக்குள்ளாதல் அல்லது வீட்டில் திருடு போதல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்கள் வரை பணவரவு அல்லது தன்னிலை உயர்தல் ஆனுல் பிறகு உடல் நலம் கெடல்; புதனுல் குடும்பத்தில் மகிழ்ச்சி; சுக்கிரனுல் பண வரவும் வெற்றியும் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது புதிய நண்பர்கள்.

### ரிஷபம்

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் உற்ருர் உறவினர்களுடன் பிரிவு அல்லது பண நஷ்டம் அல்லது நண்பர்களுடன் விரோதம்; குருவினுல் ஏமாற்றங்கள்; செவ்வாயினுல் கவலைகள்; புதனுல் புதிய நண்பர்கள் ஆனுல் தன்னுடைய செய்கையின் காரணமாக அலுவலகக் கவலைகளுக்குள்ளாதல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண நஷ்டம் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல் அல்லது ஏமாற்றப்படல் ஆனுல் பிறகு பணவரவு அல்லது மதிப்புயர்தல்; சுக்கிரனுல் மாதம முழுவதும் நனமைகள ஏற்படும் வகையில் பணவரவு அல்லது தானிய வகைகள் அல்லது மதிப்புயர்தல் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது வழக்குகளில் வெற்றி அல்லது மக்கட்பேறு.

### மிதுனம்

ராகுவினுல் பண வரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள், உடல் நலமேன்மை, குடும்பத்தில் மகிழ்ச்சி அல்லது வாகன வாய்ப்பு; குருவினுல் பண வரவு; செவ்வாயினுல் பொருள் செலவழிதல் அல்லது பல்வேறு காரணங்கள் முன்னிட்டு கவலைகளுக்குள்ளாதல்; புதனுல் பணவரவு ஆனுல் மதிப்புக்குறைதல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிப்படல் அல்லது பண நஷ்டம் அல்லது பிரயாணமும் உடல் நலம் கெடலும்; சுக்கிரனுல் மாதத்தின் 25-ம் தேதி வரை குடும்பத்தில் மகிழ்ச்சிக்குரிய நல்லன நடைபெறுதல், இறுதி நாட்களின்போது பண வரவு, அல்லது மதிப்புயர்தல் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது தானிய வகைகள் அல்லது மக்கட்பேறு.

### கடகம்

ராகுவினுல் பண நஷ்டம்; சனியினுல் பொருள் செலவழிந்துபோதல்; குருவினுலும் பண நஷ்டம் அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது மதிப்புக் குறைதல் அல்லது மனயமைதி பறிபோதல்; செவ்வாயினுல் எல்லா விஷயங்களிலும் வெற்றி பெறல்; புதனுல் கருத்து வேறுபாடுகளினுல் அல்லது தவருன ஆலோசனைகளைக் கேட்டதனுல் பண நஷ்டம்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண நஷ்டம், பிறகு பிரயாணமும் உடல் நலம் கெடலும் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல் அல்லது பண நஷ்டம்; சுக்கிரனுல் மாதத்தின் 25-ம் தேதி வரை எந்தவித நன்மையும் தீமையும் ஏற்படாது. ஆனுல் இறுதி நாட்களின் போது கேளிக்கைகளில் ஈடுபடல்.

### சிம்மம்

ராகுவினுல் கவலைகள்; சனியினுல் உற்ருர் உறவினருடன் பிரிவு அல்லது பிரயாணமும் உடல் நலம் கெடலும் அல்லது பண நஷ்டம் அல்லது பிள்ளைகளின் கோபத்திற்குள்ளாதல் அல்லது உறவினர்களுக்குத் தொல்லைகள் உண்டாக்குதல் அல்லது தானே தொலலைகளுக்குள்ளாதல்; குருவினுல் பிரயாணமும் அதனுல் கவலைகளும; செவ்வாயினுல் அதிக அளவு பண வரவு; புதனுல் எதிரிகளால் அல்லது உடல் நலம் கெடுவதால் அல்லது மதிப்புக்குறைவதால் கவலைகளுக்குள்ளாதல்; சூரியனுல் மாததின் முதல் 15 நாட்களின் போது பண வரவும் வெற்றியும். ஆனுல் பிறகு எந்தவித மாற்றமும் ஏற்படாது; சுக்கிரனுல் பண வரவு, நல்ல நண்பர்கள் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள்.

### கன்னி

ராகுவினுல் பண நஷ்டம்; சனியினுல் கவலைகள்; குருவினுல் அதிக அளவு பண வரவு; செவ்வாயினுல் மதிப்புக் கெடல் அல்லது பண நஷ்டம்; புதனுல் பண வரவு அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது நல்ல நண்பர்கள் அல்லது வாகன வாய்ப்பு அல்லது மக்கட்பேறு; சூரியனுல் பண வரவு, உடல் நலமேன்மை, வெற்றி, மதிப்புயர்தல்; சுக்கிரன் மாதத்தின் 25-ம் தேதி வரை தீமை பயப்பதால் மதிப்புக் கெடல் அல்லது கருத்து வேறுபாடுகள் ஆனுல் இறுதியில் நல்ல நண்பர் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள்

### துலா

ராகுவினுல மகிழ்ச்சி; சனியினுல் பண வரவு அல்லது மகிழ்ச்சி; குருவினுல் பண நஷ்டம் அல்லது மதிப்புக் கெடல்; செவ்வாயினுலும் தீமைகள் ஏற்படல், பண நஷ்டம் அல்லது மதிப்புக் கெடல் அல்லது உடம்பில் காயம் ஏற்படல்; புதனுல் பண வரவு, எதிரிகளை வெற்றி கொளல் அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது புதிய வீடு வாய்ப்பு; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல் நலம் கெடல் அல்லது ஏமாற்றங்கள் அல்லது பண நஷ்டம் ஆனுல் பிறகு வெற்றி: சுக்கிரனுல் மாதத்தின் 25-ம் தேதி வரை நல்ல நடவடிக்கைகளில் பங்கேற்றல் அல்லது பண வரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது மனைவிக்கு மனமகிழ்ச்சி ஆனுல் இறுதியில் கருத்து வேறுபாடுகள் அல்லது மதிப்புக்கெடல்.

### விருச்சகம்

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் பண நஷ்டம் அல்லது மதிப்புக் கெடல் அல்லது வயதான பெற்ருேர் அல்லது உறவினர் ஒருவர் இறந்ததை ஒட்டி அவருக்கு ஈமச் சடங்கு செய்தல்; குருவினுல் பண வரவும் வெற்றியும் அல்லது தானிய வகைகள் அல்லது குழந்தைப்பேறு; செவ்வாயினுல் மனைவியுடன் கருத்து வேறுபாடுகொளல் அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல் அல்லது உடல் நலம் கெடல்; புதனுல் முயற்சிகளில் ஏமாற்றங்கள் காணல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது மனைவிக்கு மனயமைதியின்மை அல்லது உடல் நலம் கெடல். பிறகு பண நஷ்டம் அல்லது ஏமாற்றங்கள் அல்லது உடல் நலம் கெடல்; சுக்கிரனுல் புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது வீடுவாய்ப்பு, சமய நிகழ்ச்சிகளில் ஈடுபடல், பணவரவு அல்லது மனைவிக்கு மனமகிழ்ச்சி.

### தனசு

ராகுவினுல் தீயநடவடிக்கைகளில் பங்கேற்றல்; சனியினுல் உடல்நலம் கெடல் அல்லது கருத்து வேறுபாடுகள், அல்லது தீயநடவடிக்கைகளுக்குள்ளாதல்; குருவினுல் உடல்நலக் குறைவினுல் கவலைக்குள்ளாதல் அல்லது பிரயாணத்தினுல் உடல் நலம் கெடல்; செவ்வாயினுல் எதிரிகளை வெற்றி கொளல் அல்லது அதிக அளவில் பணவரவு அல்லது உடல்நலமேன்மை மற்றும் மனமகிழ்ச்சி; புதனுல் வெற்றி அல்லது பணவரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது மக்கட் பேறு; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல் பிறகு மனைவிக்கு மனயமைதியின்மை அல்லது உடல்நலம் கெடல்; சுக்கிரனுல் மாதத்தின் முதல் 25 நாட்களின் போது பெண்களின் மூலம் கவலைக்குள்ளாதல். ஆனுல் பிறகு புதியஆடை ஆபரணங்கள் அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது புதிய வீடு வாய்ப்பு.

### மகரம்

ராகுவினுல் கவலைகள்; சனியினுல் மனைவி அல்லது பிள்ளைகளுடன் பிரிவு; குருவினுல் கேளிக்கைகளில் ஈடுபடல் அல்லது பலவகைகளில் மனமகிழ்ச்சியடைதல்; செவ்வாயினுல் எதிரிகளால் கவலைக்குள்ளாதல் அல்லது உடல் நலம் கெடல் அல்லது தன் பிள்ளைகள் அல்லது பெண்கள் முன்னிட்டு கவலைக்குள்ளாதல்; புதனுல் கருத்து வேறுபாடுகள்: சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல்நலமேன்மை மற்றும் வெற்றி பிறகு பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல்; சுக்கிரன் மாதம் முழுவதும் தீமைபயப்பதால் மதிப்புக் கெடல் அல்லது உடல்நலம் கெடல் அல்லதுபெண்களின் மூலம் தொல்லைகளுக்குளளாதல்.

### கும்பம்

ராகுவினுல் கருத்துவேறுபாடுகள்; சனியினுல் பிரயாணம்; குருவினுல் மனயமைதி பறிபோதல்; செவ்வாயினுல் வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல் அல்லது உடல்நலம் கெடல் அல்லது இரத்தம் சம்பந்தப்பட்ட நோய்க்குள்ளாதல்; புதனுல் வெற்றி அல்லது மதிப்புயர்தல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது எதிரிகளால் துன்பங்களுக்குள்ளாதல் அல்லது உடல்நலம் கெடல். ஆனுல் பிறகு உடல்நலமேன்மையும், எதிரிகளை வெற்றிகொளலும்: சுக்கிரனுல் மாதத்தின் முதல் 25 நாட்களின் போது பெரியோரது பாராட்டுதல்களுக்குள்ளாதல் அல்லது உறவினர் வருகை அல்லது பணவரவு அல்லது புதிய நண்பர்கள் அல்லது குழந்தைப் பேறு. ஆனுல் இறுதியில் உடல்நலம் கெடுவதால் அல்லது மதிப்புக்கெடுவதால் கவலைக்குள்ளாதல்.

### மீனம்

ராகுவினுல் பணவரவு; சனியினுல் உடல்நலமேன்மை, எதிரிகளை வெற்றி கொளல், மனைவிக்கு மனமகிழ்ச்சி; குருவினுலும் அதிக அளவில் பணவரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது புதிய வீடு வாய்ப்பு அல்லது ஆண் குழந்தைப்பேறு அல்லது வாகன வாய்ப்பு; செவ்வாயினுல் பிள்ளைகள் மூலமாக பணவரவு அல்லது தவருன வழியில் பொருள் வரவு; புதனுல் மனைவி அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடு கொளல்; சூரியனுல் உடல்நலம் கெடல் அல்லது எதிரிகளால் துன்பங்களுக்குள்ளாதல்; சுக்கிரனுல் புதிய நண்பர்கள், பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல், புதிய உறவினர்கள், பண வரவு அல்லது குழந்தைப்பேறு.




EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI, 517501



ஜனதிபதி அவர்கள் 4-6-79 அன்று திருமலையில் தி. தி. தே செயலாட்சித் தலைவர் மற்றும் மேலாண்மைக் குழுத் தலைவர் ஆகியோரிடமிருந்து விடை பெறுகின்றார்.



தி. தி. தே. செயலாட்சித் தலைவரவர்கள் ஜனதிபதிக்கு, அவருடைய திருமலை வருகைபற்றிய புகைப்பட ஆல்பம் ஒன்றினை வழங்கினர்.

சித்தூர் மாவட்ட முதலவர் திரு. டி. ராமகிருஷ்ணய்யா, தி. தி. தே செயலாட்சித் தலைவர் திரு. பி வி.ஆர்.கே. பிரஸாத், மேலாண்மைக் குழுத் தலைவர் டாக்டர் என். ரமேஸன், அறநிலைய ஆணையர் திரு. எம். சந்திர மௌலி ரெட்டி, திருமலை உதவி செயலாட்சித் தலைவர் திரு. எஸ். முனுசாமி நாயுடு ஆகியோருடன் ஜனதிபதி அவர்கள்



# திருமலையில் யாத்திரிகர்களுக்கான வசதிகள்

- இரவு 8-30 மணி வரை செயற்படும் அஞ்சல் அலுவலக வசதி மட்டுமன்றி யாத்திரிகர்களுக்கு உதவும் வகையில் இரவு 10-30 மணி முதல் நள்ளிரவு 1-00 மணி வரை அஞ்சல் அலுவலகம் செயற்படல்

- "க்யூ" வில் தங்களுடைய சாமான்களை யாத்திரிகர்கள் சுமந்து செல்வதைத் தவிர்க்க உதவும் வகையில் சாமான்களை வைத்துச் செல்வதற்காக இலவச அறை வசதிகள், "க்யூ" அறைகளின் முன் காலணிகளை விட்டுச் செல்வதற்கான வசதிகள்

- தலாளிகள், ஏமாற்றுப் பேர்வழிகள் போன்றோரின் தவறான நடவடிக்கைகளைத் தடுக்கவும், புகார்களை ஏற்றுக்கொண்டு அதற்குரிய நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் "பேஷ்கார்" நிலைப்பிரிவில் ஓர் அலுவலர் கோயிலுக்குமுன்-புறத்துவாரம் அருகே நியமிக்கப்பட்டுள்ளார்.

- "க்யூ" கொட்டகைகளில் இருக்கும் யாத்திரிகர்களின் சௌகரியங்களைக் கவனிக்கவும், அதற்கான வசதிகளை மேற்கொள்ளவும் "பேஷ்கார்" நிலைப்பிரிவில் ஓர் அலுவலர் நியமிக்கப்பட்டுள்ளார்.

## "க்யூ" கொட்டகைகளில் வசதிகள்

- உட்கூரைகளில் பொருத்தப்பட்ட மின்சார விசிறிகள் மட்டுமின்றி, காற்றோட்டமிக்க விசாலமான சுகாதாரத்துடன் கூடிய பெரிய "க்யூ" அறைகள்
- காஃபிபோர்டு நிறுவனத்தாரால் அறைகளுக்குள் உணவு விற்பனைச் செய்யப்படல்
- நியாயமான விலைகளில் உணவுப் பொட்டலங்கள் கிடைக்கப் பெறல்
- சுத்தமான பால், ஆந்திர மாநில பால்வள நிறுவனத்தாரால் விற்பனைச் செய்யப்படல்
- தி. தி. தேவஸ்தானத்தாரால் இறைவனின் திருவுருவப்படங்கள், நூல் வெளியீடுகள் விற்பனைச் செய்யப்படல்
- "க்யூ" வரிசைகளில் கூட "ஒதுங்கு" (Toilet) வசதிகள்
- குறிப்பிட்ட எல்லைக்குள் திரையிடப்படும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள்
- பக்தி நிகழ்ச்சிகளும், இசையும் ஒலிபரப்பப்படல்
- தேர்ந்த மருத்துவரின் கீழ் ஒரு வைத்தியசாலை

